## உங்கள் பார்வை-
## எமது புதிய சர்வதேச சூட்டிங்குகள் மீது!



ஓர்ஸ்டட் மற்றும் பாலியெஸ்டர் பிளெண்ட் சூட்டிங்ஸ்

*சேஸனி*
கலெக்ஷனின் சூட்டிங்ஸ்

**பாம்பே டையிங்**

BD/103/TAM

# கைராசி டாக்டர்

குமார்


அப்பனே... முருகா... இன்னைக்கு சொந்தமா கிளினிக் ஆரம்பிக்கறேன். நீங்க பக்கத் துணையா யிருந்து என் பிராக்டீஸையும் பேஷண்டு களையும் காப்பாத் தணும்...


உங்க முயற்சி வெற்றியடைய திலக மிடறேன். போய் வாங்க...


முதல் முதலா ஒரு பேஷண்ட் வராப் பல இருக்கு. நான் கைராசி டாக்டர்னு அவனுக்கு நல்ல அபிப்பிராயம் ஏற் படும்படி நடிக்கணும்...


ஹலோ... கனகசபையா... உங்க பேஷண்டுக்கு இப்பத்தான் ஆபரே ஷன் செய்து முடிச்சேன்... சக்ஸஸ் ஆச்சு...


வாங்க... இப்படி வந்து உட்காருங்க. உங்களுக்கு என்ன உடம்புக்கு?


நான் பேஷண்ட் இல்லே டாக்டர்... டெலிபோன்ஸ் டிபார்ட்மெண்டிலே யிருந்து வரேன். உங்கபுது ஃபோனுக்கு கனெக்ஷன் கொடுக்க வந்திருக் கேன்...

## விமோசனம் உண்டா?

ரொம்பக் காலத்துக்கு முன்னால், தி.மு.க ஆட்சியைப் பிடிப்பதற்கு முன்னால், அறிஞர் அண்ணா கூட்டங்களில் பேசும் போது வேடிக்கையாகச் சொல்வார்:

''முன்னெல்லாம் கைநிறையப் பணம் கொண்டு போனால் பை நிறையப் பொருள் களை வாங்கலாம். இப்போது பை நிறையப் பணம் கொண்டு போனால் கை நிறையக் கூட சாமான்களை வாங்க முடியவில்லை.''

அப்போது ரசித்தோம். அவர்களே ஆட்சிக்கு வந்தார்கள். இன்றைக்கும் அதே பரம்பரையினரின் ஆட்சிதான். மத்தியிலும் கூட ஒரே பரம்பரை ஆட்சிதான். விலைவாசி பூதத்தைக் கட்டுப்படுத்த யாராலும் முடிய வில்லையே! என்ன காரணம்?

'நோட்டடித்தால் போதுமா? வாட்டம் போக்க வேண்டாமா?' என்றெல்லாம் கவர்ச்சிகரமான தேர்தல் விளம்பர வாசகங்கள் பவனி வந்தன.

'அரிசி விலை குறைந்தால் அவ்வளவும் விலை குறையும்' என்று கிராமப்புறப் பழமொழி ஒன்றுண்டு. அதை அப்படியே நிஜம் என்று நம்பி; ரூபாய்க்கு மூன்று படி என்று அறிக்கை தந்தார்கள். முதலில் ஒரு படி... அதுவும் சென்னையிலும் கோயம்புத்தூரிலும் என்று முதல் படி. அப்புறம் படிப்படியாக மற்ற இடங்கள் என்று கற்பனைகளில் மிதந்ததுதான் மிச்சம். காரியம் எதுவும் கை கூட வில்லை.

எப்படியோ விலைவாசிகள் இறக்கை கட்டிக் கொண்டு வானத்தில் பறந்து கொண்டிருக்கின்றன. என்ன செய்தும் அவற்றைக் கீழே பிடித்திழுக்க முடியவில்லை.

மத்தியிலும், மாநிலங்களிலும் புதுப் பஞ்சாங்கம் மாதிரி 'பட்ஜெட்' என்று ஆண்டு தோறும் வெளியிடுகிறார்கள். பஞ்சாங்கப் பலன்கள் கூடப் பலித்து விடுமோ என்னவோ... பட்ஜெட் ஆருடங்கள் பலித்ததாய் வரலாறே இல்லை. ஆரம்பத்திலேயே, இத்தனை கோடி ரூபாய் துண்டு விழுகிறது என்கிறார்கள். அப்புறம் பற்றாக்குறை இரண்டு மடங்காகிவிடுகிறது.

விலைவாசி உயர்வு — அதை ஈடு செய்ய ஊழியர்களுக்குக் கிராக்கிப்படி உயர்வு — அதனால்மறுபடியும்விலைவாசிஉயர்வுஎன்று ஒரு விஷ வளையம். சாதாரணமாகச் சாலையோரம் செருப்புத் தைக்கிற தொழிலாளிக்கும், பூத்தொடுத்து விற்கிற பெண்ணுக்கும் கிராக்கிப்படி உயர்வு யார் தருகிறார்கள்?

### திடீர் விலை உயர்வு

சில கம்பெனிகளில் வாட்ச்மேன் பெறுகிற சம்பளம் கூட சராசரி இந்தியன் நினைத்துப் பார்க்க முடியாத அளவு கூடுதலாய் உள்ளது. சம்பள விகிதம் இப்படித் தாறுமாறாய் இருக்கிறது. ஆனால் கடைகளில் உப்பு, புளி, மிளகாய் அரிசி எல்லாம் எல்லோருக்கும் ஒரே விலையாகத்தான் இருக்கிறது!

அதுவும் சென்ற மாதத்தில், கணிசமான பொருள்களில் திடீர் விலை உயர்வு.. பால், சமையல் காஸ், மண்ணெண்ணெய், ஜீனி, போதாதென்று, பஸ் ரெயில் கட்டணங்கள் எல்லாவற்றையும் உயர்த்தி விட்டு போனால் போகிறதென்று டி. வி. லைசென்ஸை ரத்து பண்ணி விட்டார்கள்!

பெட்ரோலியப் பொருள்களில் பதினைந்து சதம் உயர்வு... இப்படியே சோப்பு, டார்ச் செல், சோடா, டீசல், காகிதம், சிமெண்ட், இரும்பு என்று எல்லாவற்றிலும் விலை கூடி விட்டது.

அமைதியைக் காக்க மிகச் சிறந்த முறை யுத்தத்துக்குத் தயாராய் இருப்பதுதான். —ஜார்ஜ் வாஷிங்டன்.

# விஷம் போல் ஏறும் விலைவாசி



கேவலம்... பதனீர்! ரொம்பவும் ஊட்டச்சத்துள்ளது என்கிறார்கள். வருஷா வருஷம் பத்துப் பைசா கூட்டி இந்த ஆண்டு அறுபது பைசாவுக்கு வந்து விட்டது. காலையில் காப்பியில் சர்க்கரை குறைவாக இருப்பதைப் பார்த்து, ஏதாவது டயாபெடீஸ் வந்து விட்டதா என்று நமக்கே சந்தேகம் வருகிறது.

முன்பெல்லாம் பையில் இரண்டு ரூபாய் இருந்தால், கண்ணில் படுகிற ஹோட்டலுக்குள் நுழைந்து எதையாவது சாப்பிட்டுப் பசியாறி வரலாம். இப்போது பையிலிருப்பதை எண்ணிப் பார்த்து, ஹோட்டல் விலைப் பட்டியலை ஒரு பார்வை பார்த்து தப்பில்லாமல் மனக்கணக்குப் போட்டு அப்புறமாய் ஆர்டர் பண்ண வேண்டியிருக்கிறது.

கணவன் மட்டுமே சம்பாதிக்கிற ஒற்றை வருமானக் குடும்பங்களின் பிரச்சினைகள் ஏராளம். இரண்டு பேர் கணவன் — மனைவி என்று சம்பாதிக்கிற குடும்பங்களில் வேறு விதமான பிரச்சினைகள். எவ்வளவு சம்பாதித்தாலும் போதவில்லை என்ற ஒரே தேசிய கீதம்தான் எல்லோருமே பாடுகிறார்கள்.

இப்படியெல்லாம் விலைவாசி உயர்வதற்கும், வருமானத்தால் சமாளிக்க முடியாமல் திணறுவதற்கும் என்ன காரணம்?

வாங்கும் சக்தி கூடியிருக்கிறது என்று பொதுப்படையாக எல்லோருமே கூறுகிறார்கள். இருபது ஆண்டுகளுக்கு முன்னால் மொத்த வருமானமே இருநூறு ரூபாய் கூட இல்லாத ஒருவன் இரண்டாயிரம் ரூபாய் பெறுமானமுடைய ஒரு பொருளைத் தவணை முறையில் வாங்கமாட்டான். சேமித்த பணத்திலிருந்து ஏதாவது வாங்குவானே தவிரக் கடனில் வாங்கிவிட்டு அப்புறம் தவணை என்ற பெயரில் வட்டி செலுத்த மாட்டான்.

* இல்லத்தரசிக்கு இரண்டு பக்கமும் இடி





* வாசிக்க மட்டுமே விலைப்பட்டியல் வாங்கும் சக்தி இல்லையே?



* வெ. சண்முகசுந்தரம்

**மாம்பலம் மார்க்கெட்**

இன்று நிலைமை என்ன? தேவையோ தேவையில்லையோ, அடுத்த வீட்டைப் பார்த்து விட்டு நமக்கும் வாங்க வேண்டுமென்று தோன்றுகிறது. ஆயிரம் ரூபாய் சம்பளக்காரன் கொஞ்சமும் கூசாமல் பத்தாயிரம் ரூபாய்ப் பொருளை வாங்கிவிடு

கிறுன். காரணம் சேமிப்பில் நம்பிக்கை போய்விட்டது. நம்பிக்கை போகக்காரணம் இன்றைய ரூபாயின் மதிப்பு நாளை இருக்காது, சரியும் என்ற உறுதி.

வரவுக்குள் செலவு என்று இனிமேல் யாரும் பந்தயம் வைத்தால் கூட ஜெயிக்க முடியாது.

பொருள்கள் அதிகமாக விற்பனையாகும் எனில் விலை குறையும் என்பது ஒரு பொருளாதாரக் கொள்கை. மாம்பலம் மார்க்கெட் நல்ல உதாரணம். தாம்பரத்திலிருந்து கடற்கரை வரையுள்ள இடங்களில் வேலை பார்க்கிறவர்கள் இந்த மாம்பலம் மார்க்கெட்டை ஆக்கிரமிக்கிறார்கள். இங்கே ஐம்பது காசுக்குக் கிடைக்கிற கீரைக்கட்டு, மயிலாப்பூரில் அறுபது காசு, எழுபது காசு என்று விற்கும். பேரம் பேசுவது என்பது ஒரு கலை. பேரம் பேசாத இடங்களில் சொன்ன விலை கொடுத்து அப்படியே வாங்குவது என்று வந்து விட்டால் விலைகள் இஷ்டம் போலத்தான். ஆனால் எல்லா இடங்களிலும் பேரம் பேசிவிட முடிவதில்லை.

டஜன் பத்து ரூபாய் சொல்கிற மாம்பழத்தை ஐந்து ரூபாய்க்குப் பேரம் பேசி, எட்டு ரூபாய்க்கு வாங்கியும் விடுகிற தைரியசாலிகளைப் பார்த்தால் வியப்பாக இருக்கும். நாம் ஐம்பது காசு குறைத்து கேட்டால் கூட அடி விழுமோ என்று பயமாக இருக்கிறது. 'வாங்குகிற மூஞ்சியைப் பார்...' இத்தியாதிகளைக் கேட்கத் தயாராக இருக்க வேண்டும்.

இருபது வருஷங்களுக்கு முன்னால் பவுன் நூற்றைம்பது ரூபாய்... இப்போது ஆயிரத்து அறுநூறு, ஆயிரத்து எழுநூறு. தங்கம் வாங்குகிற தேவை எல்லா மட்டத்திலும் ஒன்று போலவே தான் இருக்கிறது. கல்யாண வியாபாரத்தில் பெண் பிடிக்குமோ இல்லையோ பவுன் பிடிக்க வேண்டும். இதனால் அவதிப் படுவோர் ஒருபுறம் இருந்தாலும், தியாகராய நகர் ஜுவெல்லரி மார்ட்டுக்குள் நுழைந்த போது, இது என்ன நகைக் கடையா, கொத்தவால் சாவடியா என்று ஒரு மயக்கம் ஏற்பட்டது. பணம் இல்லை, இல்லை என்கிறார்கள்... நகை கடைகளிலும், புடவை கடைகளிலும் எப்படி இத்தனை கூட்டம் கூடுகிறது? கறுப்புப் பணப் புழக்கம் ஒரு காரணமாயிருக்கலாம்.

### சொந்தத்தில் சின்ன வீடு

சிமெண்ட், இரும்பு, விலை கூடுவது நடுத்தர மக்களைப் பெரிதும் பாதிக்கிற சமாச்சாரம். அவனவன் கடன் வாங்கித்தான்



எது சரியென்று தெரிந்து கொண்ட பிறகும் அதைச் செய்யாமல் இருப்பது மிக மோசமான கோழைத்தனம்.
— கன்ஃபூசியஸ்.



## ஒலிம்பிக் விளையாட்டு பயிற்சி அளிக்கும்
## ஜிம் ஓ'டோஹார்த்தி கூறுகிறார்:
# "காம்ப்ளான் ஒண்ணுதான் வலுவையும் தெம்பையும் உருவாக்குகிறது."

ஒலிம்பிக் வீரர் ஜிம்ஓ'டோஹார்த்தி, இந்தியா உள்பட உலகம் முழுவதிலுமுள்ள இளம் விளையாட்டு வீரர்களுக்கு கடினமான போட்டிகளுக்காக பயிற்சி-அளித்துள்ளார். 'பிறக்கும்போதே சாம்பியன்களாக பிறப்பதில்லை. அவர்கள் உருவாக்கப்படுகிறார்கள்'. என்பதை அவர் நம்புகிறார். ஒருவரை வெற்றியாளராக்குவது கட்டுப்பாடான சக்தி—மற்றும் உடல் சக்தி.

"நீச்சல் வீரர்கள், ஓட்டம் மற்றும் களவிளையாட்டு வீரர்கள், குறிப்பாக வளரும் குழந்தைகளுக்கு இதை சிபாரிசு செய்கிறேன்" என்கிறார் ஜிம் ஓ'டோஹார்த்தி. ஒரு பரிபூரண உணவாகும் காம்பளான்—எளிதில் ஜீரணிக்கவல்லது. தெம்பு அபிவிருத்தி செய்யும் ஆரோக்கிய வளர்ச்சிக்கான 23 மூலதார ஊட்டச்சத்துக்களுடன் கூடியது."

ஜிம் ஓ' டோஹார்த்தி கூறுவதை எடுத்துக் கொள்ளுங்கள். ஆரோக்கியமான முழுமையான வளர்ச்சிகு உங்கள் குழந்தைக்கு அன்றாடம் வழங்குங்கள் காம்ப்ளான். குழந்தைகள் விரும்பிடும் இனிய சுவைகளில் கிடைக்கிறது காம்ப்ளான்.




# காம்ப்ளான்® -திட்டமிட்ட பரிபூரண உணவு

GLC.9.2316.Tam.R1

''மாருத புன்முறுவலுடன் மங்காத ஆர்வத்துடன் பாலசந்தர் பதில்களைக் கேட்டு வருகிறேன். ஒரே ஒரு குறைதான் — பத்து நிமிஷத்தில் முடிந்து விடுகிறதே!''

— ராகவன், செங்கல்பட்டு



வீடு கட்டுகிறான். பணப் பற்றாக்குறை, பொருள்கள் பற்றாக்குறை என்று ஒரு வீட்டைக் கட்டி முடித்து வெளியே பூசக் கூட முடியாமல் ஒரு வருஷம் ஒன்றரை வருஷம் காத்துக் கிடந்து — அவர்கள் படுகிற பாடு சொல்ல முடியாது. சொந்தத்தில் சிறு வீடு என்பது ஆடம்பரம் அல்ல. இரும்பும், சிமெண்டும் ஏறுமாறாய் விலை உயர்கிற போது இவர்களுக்குத்தான் விழி பிதுங்குகிறது.

டீசல் விலை உயர்வு.. அன்றாடம் பல்லவனில் தொத்திக் கொண்டு பயணம் செய்கிற அப்பாவியை உலுக்குகிறது.

ஆந்திரா வழியாக ரெயிலில் போனவர்களுக்குத் தெரியும். இரண்டு பக்கமும் வயலில் நெருப்புப் பற்றி எரிகிற மாதிரி மிளகாய் பழுத்துக் குவியல் குவியலாகக் கிடக்கிறது. இங்கே விலையோ நெருப்பாய்ப் பற்றி எரிகிறது. கோதுமையோ, நெல் விளைச்சலோ நாட்டில் குறைவே இல்லை. ஏற்றுமதியே ஆரம்பித்து விட்டார்கள்! இருந்தாலும் எவ்வளவு பொருள் விளைந்தாலும், விலைகள் இறங்காத மர்ம பூமி இந்த நாடு.

### மோசடி விவகாரம்

ஒரு அரசாங்க ஊழியர் சொல்கிறார்:

''எங்களுக்கு இந்த கிராக்கிப்படி உயர்வு, சம்பள உயர்வு எதுவும் வேண்டாம். இதைச் சொல்லிச் சொல்லியே ஆளுக்கு ஆள் விலைகளைக் கூட்டிக் கொண்டு போகவும் வேண்டாம். சர்க்கார் விலைகளை குறைத்தால் போதும். நாங்கள் சம்பளம் வாங்குவது தான் எல்லார் கண்ணையும் கரிக்கிறது. அரசாங்க வருமானம் முழுவதும் எங்களுக்குக் கொட்டியழவே போதவில்லை என்கிற தொனியில் ஆட்சிப் பொறுப்பிலுள்ளவர்களே பேசி அவமானப்படுத்துகிறார்கள். தவருன, நடைமுறை சாத்தியமல்லாத பொருளாதாரக் கொள்கைகளை வைத்துக் கொண்டு கட்டியழுகிறார்கள். தண்டச் செலவுகள் என்று தெரிந்தே வாரி விடுகிறார்கள். பட்ஜெட்டில் உதைக்கிற போது கூடுதல் வரி. முதலில் வாழ்க்கைக்கு வேண்டிய அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்து, சாதாரண மக்களைச் சிரிக்க வைத்து விட்டு, அப்புறமாய் இவர்கள் நெஞ்சு நிமிர்த்தட்டும். பழம் பெருமை பேசட்டும். இவர்கள் ஒன்றைத் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும். ஏற்கனவே உயர்ந்து விட்ட விலைவாசியை ஈடு கொடுக்கத்தான் பஞ்சப்படி உயர்வு தருகிறார்கள். ஆனால், சம்பள உயர்வு என்று ஏதோ போனஸ் மாதிரி எட்டுக் காலம் தலைப்பில் பத்திரிகைகள் செய்தி போடுகின்றன. சாயங்காலமே இந்த 'உயர்வு' காய்கறிக் கடையில் எதிரொலிக்கிறது. இது ஒரு மோசடி விவகாரம்...''

ஒரு குடும்பத் தலைவியிடம் கேட்ட போது சொன்னார்:—

''ஆண்களுக்குக் குடும்பப் பொறுப்பே கிடையாது — பல இடங்களில். ஏதோ மாசா மாசம் சம்பளம் என்று ஒரு தொகையைக் கொடுத்து விட்டுக் கையை உதறிக் கொண்டு போய் விடுகிறார்கள். உப்புப் புளி மிளகாய் விலையையெல்லாம் **அவர்கள் கண்டு** கொள்வதில்லை. காபியில் சர்க்கரை இல்லை, தான் இல்லை, கறியில்லை என்று கூப்பாடு போடுவார்கள்''.

பாவம், அவர் தான் என்ன செய்வார்! இதற்கெல்லாம் பரிகாரம் தான் என்ன? வெ. சண்முகசுந்தரம் என்ன சொல்கிறார் பார்ப்போம்.

## வெ. சண்முகசுந்தரம்

*(சென்னை பல்கலை கழக பொருளாதாரத் துறையின் தலைவர்-மற்றும் தமிழக, மத்திய திட்ட கமிஷன் களின் முன்னாள் உறுப்பினர்)*

ஒரு பொருளின் விலை உயர்வோ அல்லது விலை மலிவோ, அந்த பொருளின் உற்பத்தி அளவைப் பொறுத்தே இருக்கிறது. உற்பத்தி அதிகமாக இருந்தும், விலை உயர்வாக இருந்தால், இந்த நிலையைச் சரி செய்ய ஒரு அரசாங்கத்தால் நிச்சயம் முடியும்.

நமது நாட்டில் உற்பத்தி செய்யப்படும் பொருட்களுக்கு உள்ள மதிப்பிற்கேற்ப நோட்டுக்கள் அச்சடிக்க வேண்டும். அதை மீறிச் செயல் படுவோமானால், இதனால் ஏற்படும் பணவீக்கம் பாமர மக்கள் மீது சுமத்தப்படுகிற கடும் தண்டனைக்கொப்பாகும். ஆனால், இந்த கதை தான் நமது நாட்டில் நடந்து கொண்டிருக்கிறது.

ஒரு சராசரி இந்திய குடிமகன் தனது வருமானத்தில் 80 சதவீதத்தை உணவு போன்ற அத்தியாவசிய பொருட்களுக்கு செலவழிக்கிறான். அப்புறம், மற்றதேவைகளான கல்வி, உடல் நலம், வீடு, உடை போன்றவற்றுக்கு மீதி 20 சதவீதம் போதுமா? ரஷ்யா, அமெரிக்காவில் ஒரு நபர் வருடம் ஒன்றுக்கு ஒரு டன் உணவு வகைகளை உட்கொள்ளுகிறார். நமது நாட்டில் இதில் ஐந்தில் ஒரு பங்கு கூட நாம் சாப்பிடுவதில்லை. இருந்தும் வருமானம் சாப்பாட்டுக்கே போதவில்லை.

நாட்டில், 30 ஆண்டுகளில் மக்கள் தொகை மூன்று மடங்காக உயர்ந்து விட்ட போதிலும், உற்பத்தி ஆமை வேகத்தில் அதிகமாகி இருக்கிறது. பருப்பு வகைகளில் உற்பத்தி 1950 கால கட்டத்தில்-10 மில்லியன் டன்னாக இருந்தது. ஆனால் இப்போது அது பதினோரு மில்லியன் 'டன்'னை கூடத்தாண்டவில்லை. விலைவாசி உயர்வுக்கு பண வீக்கம் மட்டுமே காரணமில்லை. அத்தியாவசிய பொருட்களின் உற்பத்தி குறைவும் முக்கிய காரணம்.

## விமோசனம்?

ஆக, அரசாங்கம் பசுமைப் புரட்சியை நெல், கோதுமையுடன் நிறுத்தாமல், இதர அத்தியாவசிய உணவுப் பண்டங்களிலும் தொடர வேண்டும். இரண்டாவதாக உற்பத்திக்கு உதவாத அரசுச் செலவினங்களைக் குறைத்து பற்றுக்குறை பட்ஜெட், நோட்டு அச்சடித்தல், பணவீக்கம் இவற்றுக்கு முடிவு கட்ட வேண்டும். இதைச் செய்யாதவரை விலைவாசி உயர்வு மக்களை வருத்தவே செய்யும்.

கட்டுரை: சுப்ரபாலன், தில்லப்பா

படங்கள்: சுபா, தாமு

சார்லி சாப்ளினின் அம்மா ஒரு பாடகி. ஒரு சமயம் அவர் இசை அரங்கில் பாடிக் கொண்டிருக்கும் போது குரல் கம்மி மேற்கொண்டு பாட முடியாது தவித்தார்.

உடனே ஐந்து வயது சார்லி சாப்ளின் அம்மா நிறுத்திய பாட்டைத் தொடர்ந்து பாடினார்.

அரங்கிலிருந்தவர்கள் உற்சாக மிகுதியால் பண நோட்டுக்களையும், வெள்ளிக் காசுகளையும் மேடை மீது வீசியெறிந்தார்கள்.

அவ்வளவுதான்! சார்லிசாப்ளின் பாட்டைப் பாதியில் நிறுத்திவிட்டு, ''முதலில் இறைந்து கிடக்கும் காசுகளையும், நோட்டுக்களையும் எடுத்துக் கொண்டு விடுகிறேன்; பிறகு தொடர்ந்து பாடுகிறேன்'' என்றாராம்!



இசை அரங்கே 'கொல்'லென்று சிரித்தது!

அது சார்லிசாப்ளின் நகைச்சுவை நடிகராக மாறுவதற்கு ஆதாரமான நிகழ்ச்சியாக அமைந்தது!

—காயத்ரி.

பூமியை எப்படி நடத்திச் செல்லவேண்டும் என்பது குறித்து பிரமாதமான கருத்துக்களை உடையவர்கள் ஒரு சின்ன தோட்டத்தைப் பயிரிடுவதில் ஆரம்பிக்க வேண்டும். —ஜா. எரிக்ஸன்.

போலீஸ் கலவரம்

இட ஒதுக்கீடு கலவரம்

குஜராத் அரசு

அகாலி

சீக்கிய பயங்கரவாதிகள்




பாலஸ்தீன விடுதலை இயக்கத்தை இந்தியா அங்கீகரித்த மாதிரி இலங்கை விடுதலைப்புலிகளையும் அங்கீகரிக்க வேண்டும் என்று இலங்கைத் தமிழர் தலைவர் திரு அமிர்தலிங்கம் கோரியுள்ளார்




# கல்கி

1985 மே 5

மலர்: 43 இதழ்: 40

குரோதன சித்திரை 23




# சவுக்கைச் சொடுக்கிறார்கள்!

யாருமே கனவிலும் எண்ணாத அளவுக்கு மாபெரும் வெற்றியை ராஜீவுக்கு அளித்த நாடாளுமன்றப் பொதுத் தேர்தலுக்குப் பின் நடந்த சட்டமன்றத் தேர்தல்களிலேயே இந்திரா அனுதாப அலை ஓய்ந்து வருவதற்கான அறிகுறிகளைக் கண்டோம். அண்மையில் நடந்த உப தேர்தல்கள் ராஜீவ் ஆதரவு அலை அடங்கிப் போயிருப்பதையே மீண்டும் மெய்ப்பிக்கின்றன. பதினொரு மாநிலங்களில் 26 சட்டமன்றத் தொகுதிகளிலும் 3 நாடாளுமன்றத் தொகுதிகளிலும் தேர்தல்கள் நடந்தன. இவற்றுள் இ. காங்கிரஸ் போட்டியிட்ட தொகுதிகளில் மூன்றில் ஒரு பங்கினைக் கூட அதனால் கைப்பற்ற முடியவில்லை. 'உபதேர்தல்கள்தானே, இதனால் மத்தியில் நமது ஆட்சிக்கோ, அதிகாரத்துக்கோ என்ன ஆபத்து வந்துவிடப் போகிறது' என்று தப்புக் கணக்குப் போடாமல் இதனை இ. காங்கிரஸ் தலைவர்கள் ஓர் எச்சரிக்கையாக எடுத்துக் கொள்ள வேண்டும்.

அனுதாப வோட்டு ஒருபுறம் இருக்க, ராஜீவ் காந்தியிடம் மகத்தான நம்பிக்கை வைத்தார்கள் மக்கள் என்பதும் உண்மை. இளைஞர், திறமைசாலி, நேர்மையாளர், நாட்டின் சுபிட்சத்துக்கும் நமது நல்வாழ்வுக்கும் உழைப்பார் என்று எதிர்பார்த்தார்கள். இன்று அந்த நம்பிக்கையும் எதிர்பார்ப்பும் அடியோடு மறைந்துவிடவில்லை என்றாலும் குறைந்து வருகிறது என்பதற்கு உப தேர்தல் முடிவுகள் சான்று.

மக்களின் ஏமாற்றத்துக்குக் காரணம் இல்லாமல் போகவில்லை. சமீபத்திய பொது பட்ஜெட்டும் ரயில்வே பட்ஜெட்டும் சராசரி இந்தியனுக்கு பலத்த அடி. அதைத் தொடர்ந்து விலைவாசி உயர்வுகள் பொதுமக்களைத் திக்குமுக்காடச் செய்துவருகின்றன. இன்னும் தீர்க்கப்படாமல் நீடிக்கும் பஞ்சாப் பிரச்னை, ஈழத் தமிழர் பிரச்னை, அஸ்ஸாம் பிரச்னை முதலியனவும் வெற்றி வாய்ப்புகளைப் பாதித்துள்ளன. குஜராத், மத்தியப் பிரதேச மாநிலங்களில் இட ஒதுக்கீடு பிரச்னை விசுவரூபம் எடுத்து அதனால் ஏற்பட்ட மனத்தாங்கல்கள், கலவரங்கள் எல்லாம் காங்கிரஸ் கட்சிக்கும் ஆட்சிக்கும் அதன் தலைவர்களுக்கும் உள்ள மதிப்பை மக்களிடையே குறைத்துள்ளன. எனவேதான் எதிர்க்கட்சிகள் பலமாயுள்ள கர்நாடகம், ஆந்திரப் பிரதேசம், மேற்கு வங்கம் ஆகியவற்றில் மட்டுமின்றி, உத்தரப்பிரதேசம், பீகார், ஒரிஸ்ஸா, ஏன், ராஜஸ்தானில் கூட இ. காங்கிரஸ் இந்த உபதேர்தலில் அடி வாங்க நேரிட்டுள்ளது. அரசிடம் அடி வாங்கிய மக்கள் தரும் பதிலடி இது.

இதனை எதிர்க்கட்சிகளின் வெற்றி என்று கொண்டாட முடியாவிட்டாலும் ஆளும் கட்சிக்கு எச்சரிக்கையாகக் கொள்ள வேண்டும். ராஜீவ் விழிப்புடன் இருக்கிறார் எனில் அவர் இந்த உபதேர்தல் தோல்விகளைக் கண்டு சோர்வடையாமல் தங்களை முடுக்கிவிட மக்கள் சவுக்கைச் சொடுக்கியுள்ளார்கள் என்று புரிந்து கொள்வார்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



# தெய்வப் பிறவி

1985–ஆம் வருஷத்திய படம்தான்.
தமிழுக்கு மூலம் ஹிந்தி. ஹிந்திக்கு மூலம்?

ஒரு தியாகப் பட்டத்தை அடைவதற்காக அக்காவும், தங்கையும் போட்டி போடும் கதை. அம்மா, அப்பா இல்லாத அக்கா, தங்கையைக் கல்லூரியில் படிக்க வைக்கிறாள். தங்கை படிக்கிறாள். அப்புறம் காதலிக்கிறாள். தங்கை காதலிப்பவனையே, அக்காவும் காதலிக்க, தங்கை அக்காவிற்காக விட்டுக் கொடுக்க, அக்கா கடைசியில் விஷயம் உணர்ந்து தங்கைதான் எவ்வளவு பெரிய தியாகி என்றுணர்ந்து, மண்டையைப் போடுவதன் மூலம் 'தெய்வப் பிறவி' பட்டத்தைச் சுமக்கிறாள், என்று கதை.

நிறைய குடங்களைக் கவிழ்த்துப் போட்டு அதன் மேல் ஒய்யாரமாய் ஒரு ஜோடியைப் படுக்க வைத்து போஸ்டர் போட்டுக் கிளுகிளுப்பை எதிர்பார்க்க வைத்து, ஏமாற்றிவிட்டார்கள். குடப்பாட்டு சுமார் தான். ஆனால் 'பூவை ஒருத்' பாட்டு நெஞ்சை அள்ளுகிறது. இசை ஹிந்தியில் யாரென்று ஞாபகமில்லை. தமிழில் சங்கர் — கணேஷ்.

எம். ஆர். ராதாரவி வில்லன். எதிர்பாராமல் ஊர்வசியை மணக்கிற ஜாக்பாட் அடிக்கிறது. முதலிரவுக்கு முன்னாலேயே ஒரு கொலையையும் செய்து விட்டு ஜெயிலில் ஒதுங்கிவிடுகிறார்.

இடைவேளையின்போது எம். ஆர். ராதாரவி கொலை செய்வது ஒரு திருப்பம். அப்புறம் ஊர்வசி ஏற்கெனவே மோகனைக் கணவனாக்கிக் கொண்டு ஒரு குழந்தையையும் பெற்றுவிட்டார் என்று சொல்கையில் ஒரு திடுக்.' மனோரமாவும், தேங்காயும் அடிக்கும் லூட்டியின் போது ஒரு லேசான களுக். ஆனால் முந்தா 'நான் போய் உட்கார்ந்தது போல் இருக்கிறது தியேட்டரை விட்டு வரும்போது!

ஹிந்தியில் ஸ்ரீதேவிக்காக ஓடியதோ என்னவோ?

## தேய்பிறை

ராதிகாவிற்கு டாலி பாத்திரம். அருமையான வார்ப்பு. அடம் பிடிக்கும் குழந்தை மனது. வளர்ந்து விட்ட எதற்கும் பணியாத உடம்பு. 'என் லேட் என்று பிரின்ஸிபால் கேட்டாரா? கல்லூரியையே விலைக்கு வாங்கு' என்று செல்லம் கொடுக்கும் 'கோடீஸ்வர' அண்ணன் — ஜெய்சங்கர்.

விளையாட்டுகள் மட்டும் வாழ்வு தராது என்று மெல்லிய குரலில் தங்கைக்கு அண்ணன் எடுத்துச் சொல்ல, 'கல்லூரியில் முதல் மார்க் வாங்குபவன் என்னோடு பதினைந்து நாள் சுற்றுலா வரலாம்' என்று தங்கை பரிசுப் போட்டி அறிவிக்கிறாராம். அவருக்கு சரப் பகையாய் இருக்கும் மோகனுக்கு அந்த அதிர்ஷ்டம் அடிக்கிறது.

பார்க்கில் சீட்டாடிக் கொண்டிருக்கும் நான்கு ரவுடிகளை சாதுர்யமாய் மோகனுக்கு எதிராக டாலி திருப்பி விட, அடிதடி கலாட்டா முடிந்து, மோகன் ராதிகாவின் மனத்தில் இடம் பிடிக்கிறார் என்பது வரை வழக்கமான தாளிப்பு. 'கட்டபொம்மன் பரம்பரை' தேங்காய் இழுவை. 'இங்கே வாய்யா, இவன் கன்னத்தில் ஒரு அறை விடு' என்று வேலைக்காரன் கூப்பிடப்பட்டு அடி வாங்கும் பி. ஏ. ஜனகராஜ் ஓ.கே. அப்புறம் தான் கவை, கதையில், காட்சி அமைப்பில்.

# பிள்ளை நிலா



'பாவ மன்னிப்பு' காலத்தில் எம். ஆர். ராதா போல் இந்த சீனனில் சத்யராஜ். வில்லன்களுக்கான இலக்கணங்களைத் திருத்தி எழுதிக் கொண்டிருக்கும் அற்புதராஜ். அநாவசிய ஆர்ப்பாட்டம் இல்லாமல் எதிர் வேஷம் போட்டுப் பெயர் வாங்குவது அவ்வளவு சுலபமில்லை — சத்யராஜுக்குச் சுலபமாகிறது.

வில்லன் என்றதும் நினைவுக்கு வருகிறது இன்னொரு வில்லன் ராஜீவ் — இட்லியா, தோசையா, ஊத்தப்பமா என்று புரியாத மாவு. வேலையில்லாமல் விஸ்கி டம்ளரோடு அலையும் பரிதாபம். கடைசியில் அர்த்தமில்லாத ஒரு சாவு.

சாவு என்றதும் நினைவுக்கு வருகிறது. அவர் சாவுக்கான காரணம் மாதவி. அதற்கு மாதவி சொல்லும் காரணம், டபிலடி. அரைகுறை டான்ஸாக்காகவே அவரையும் பட்டியலில் சேர்த்திருக்கிறார்கள்.

பட்டியல் என்றதும் நினைவுக்கு வருகிறது.

ஆரம்பத்தில் உண்டு ('கல்லாப்பெட்டி. தவக்களை எல்லோரும் (பின்னால் காணவே காணோம்.) காக்கிச் சட்டைப் பிரியரான கமலுக்கு முட்டை கொடுத்து பைப்பில் ஏறச் சொல்லும் அந்த லிம் டக்கர். பைப் பிடித்து ஏறும் வழியில் பாத்ரூம் ஜன்னல் வர. ஜன்னல் வழியே குளிக்கும் அம்பிகா தெரிய மேலே ஏறாமல் அந்தரத்தில் கமல் நிற்க. "அங்க என்னடா பண்றே?" — "பைப்பைப் பிடிச்சுட்டுத் தொங்கிறு. ஆர்ம்ஸ்லாம் இம்ப்ரூவ் ஆகும்பா" என்று கமல் பதில் சொல்வதும் கலகல.

அம்பிகா என்றதும் நினைவுக்கு வருகிறது. காமிரா 'வும் கையுமாய் சுவர் ஏறிக் குதித்து கமலைப் பார்க்க வரும் அம்பிகா பிற்பகுதியில் காணாமல் போனதும். திடீரென்று வில்லன் ராஜீவுடன் படுக்கையறை வரை போவதும்—என்னங்க சாமி இது? அப்புறம் அவரைக் காப்பாற்ற கமல் ஜன்னலை உடைத்துக் கொண்டு உள்ளே குதிக்கும் அவசியம் வேறு. ராஜீவோடு சண்டை அமர்க்களம்.

சண்டை என்றதும் நினைவுக்கு வருகிறது.

அத்தனை சண்டைக் காட்சிகளும் அற்புதம். சில அநாவசியம் என்றாலும் கூட. பாதி ரயில் நீளத்திற்கு ஒரு லாரி. அதன் மீது சரக்கு மூட்டைகள். அதன் மீது வில்லன்கள் + கமல் சண்டை அருமையான படப்பிடிப்பு. துரத்தும் மோட்டார் சைக்கிள் போலீஸார் ஒவ்வொருத்தராய் அடிபட்டு அம்பேல் ஆவதும். கைகொடுங்கள் ஸ்டண்ட் மாஸ்டர்.

கைகொடுங்கள் என்றதும் நினைவுக்கு வருகிறது. இன்னொருத்தருக்கும் அழுத்தமாய் கைகொடுக்க வேண்டும். — இளையராஜா. அத்தனை பாடல்களும் அருமை. ஒன்றே ஒன்றைத் தவிர. அந்த சாராயக் கடை ஒய். விஜயாவுடன் கமல் பாடும் அநாவசிய பாடல் அருவருப்பு.

சாராயக்கடை என்றதும் நினைவுக்கு வருகிறது.

சாராயம் குடித்துவிட்டு. ஆட்டோவைக் கவிழ்த்து அதன்மீது தட்டித் தட்டிப் பேசும் கமல் அமர்க்களம். 'இன்ச் டேப் வச்சு அளக்கறீங்களேப்பா. நெஞ்சோட உறுதியைப் பாத்து போலீஸுக்கு ஆளெடுக்கணும் தெரியுமா?' என்று குமுறும் போது கமல் கமல் தான்.

பொழுது போக்குக் காக்கிச் சட்டை.

# தூங்காதே

—ஜெயமன்மதன்.

"உங்க அம்மாவோடதானே ஃபோனலபேசணும்? பேசலாம் வாங்க" என்று ராதிகா மோகனிடம் சொல்கிறான். அவசர அவசரமாய் ஊரில் ஃபோன் நடப்பட்டு மோகன் அம்மாவுடன் பேசுகிறார். "உங்களுக்கு வேறென்னம்மா வேணும்?" என்று ராதிகாவே ஃபோனில் கேட்க. "வீட்ல வௌக்கேத்தி வக்க ஒரு பொண்ணு வேணும்" என்கிறார் மோகனின் அம்மா. "அவ்வளவுதானே?" ராதிகா சொடக்குப் போட. நூற்றுக் கணக்கில் பெண்கள் ஏற்றிய விளக்கோடு மோகனின் வீட்டுக்குள் ஊர்வலம் வரும் சீன் நல்ல கற்பனை.

ஊமைக் காதலாய் ராதிகா காத்திருக்க. இங்கே மோகன் முறைப்பெண் நளினியை மணந்துகொள்ள. ராதிகா ஒரு நாளாவது உங்களோடு வாழ வேண்டும் என்று மோகனைக் கெஞ்சி அவர் மறுத்ததும் ஜன்னல் வழியே எகிறித் தற்கொலை.

(இண்டர்வெல் முடிந்து)

**வளர்பிறை**

இறந்து போன டாலியின் ஆவி மோகனின் குழந்தையைப் பிடித்துக் கொள்ள. படத்தில் நல்ல சுறுசுறுப்பு. பிறந்த நாள் பார்ட்டியில் பேபி ஷாலினி "நானே பாடறேன்" என்று சொல்லி மோகன்— ராதிகாவுக்கு மட்டும் தெரிந்த ராஜா மகள் பாடலை ஆரம்பிக்க. சூடு பிடிக்கிறது. அப்புறம் ஆவியின் ஆர்ப்பாட்ட சமாச்சாரங்கள்.

அசோக்குமாரின் திறமையான காமிரா இறக்கு மதிப் படங்களுக்குச் சவால். குறிப்பாய் ஆளில்லாத கார் மோகனைத் துரத்தும் கல்லறைக் காட்சி. ரயிலில் பாட்டியோடு போகையில் பாலத்தைக் கடக்கும் போது பிடித்துத் தள்ளிவிட்டு. பின்னால் அந்தப் பாட்டி இல்லாமல் 'யார் எனக்கு சோறு போடுவாங்க. யாரு எனக்கு கதை சொல்வாங்க?' என்று குழந்தையேங்கும் கட்டம் அழுத்தம்.

மோகன் — நளினி — ஷாலினி காம்பினேஷன் ஜமாய்க்கிறது.

இருந்தாலும் க்ளைமாக்ஸ் காட்சியின் பேத்தல் கொஞ்சம் உறுத்துகிறது. நெருப்பைக் கண்டு தான் ஆவி பயப்படுமே. எதற்காக நளினி புடவையை அவிழ்த்து எறிந்து தப்பிக்காமல் தண்ணீர் தொட்டிக்கு ஓடுகிறார்?

முன் பாதி அவ்வளவாய் போரடிக்கவில்லை. பின் பாதி கொஞ்சமும் பொறுமையைச் சோதிக்கவில்லை.

# மிக மிக ரசித்த படம்





நூல்வேலி முடிவு



மிகச் சிறந்த படம்



முக்கிய இந்தியர்

***கேள்வி (21): 'நூல்வேலி' படத்தின் இறுதிக் காட்சியில் சரிதாவின் முடிவைத் தாங்கள் கையாண்ட முறை சரிதானு? (எஸ். மணிகாந்தி, கரூர்)***

கே. பாலசந்தர்: சரியென்று தோன்றுவதை நான் எப்படிக் காட்சியில் அமைக்க முடியும்? ஸோ... உங்கள் கேள்வியே சரியில்லே. ஆனுல் நடைமுறைக்குச் சரியில்லாமல் சில முடிவுகள் இருக்கலாம். சூழ்நிலையையும், மன நிலையையும் பொறுத்து சில கதாபாத்திரங்கள் சில முடிவுகளுக்கு விரட்டப்படுகிற போது அந்த முடிவுகளே அவர்களே தேர்ந்தெடுக்கிறுர்கள். அவை விவாதத்துக்குரிய முடிவுகளாகி விடுவது தவிர்க்க முடியாதாகிவிடுகிறது. சொல்லப் போனுல் அந்த முடிவுகள் விவாதிக்கப்பட வேண்டும் என்பதே என் எண்ணம். அந்த விதத்தில் எனக்கு வெற்றியே!

***கேள்வி (22): நீங்கள் ஒரு ரசிகன் என்ற முறையில் மிகவும்ரசித்தபடம்எது? (இ.பீமாராவ்,கோவை 1)***

கே. பாலசந்தர்: நான் மிக மிக ரசித்த படம் பல ஆண்டுகளுக்கு முன் வெளி வந்தது. 'சிட்னி போய்ட்டர்' நடித்த ''டிஃபை யண்ட் ஒன்ஸ்'' என்கிற ஆங்கிலப் படம். ஒரு வெள்ளே மனிதனும் கறுப்பு மனிதனும் சங்கிலியால் சேர்த்துக் கட்டப்பட்டிருக்கும் போது தப்பித்துப் போகிற கதை. இரண்டு பேரும் ஒருவரை ஒருவர் வெறுப்பவர்கள்; இருவருக்குள்ளும் எத்தனையோ சண்டைகள். இருந்த போதிலும் தப்பித்துப் போகும் போது ஒத்துப் போக வேண்டிய நிர்ப்பந்தச் சூழ்நிலையை மிக அழகாய்க் காட்டியது அந்தப் படம். இந்தப் படம் என் மனத்தில் ஏற்படுத்தின பாதிப்பை இதுவரை வேறு எந்தப் படமும் ஏற்படுத்தினதில்லே.

***கேள்வி (23): 'சோ'வை விட நீங்கள் அப்படி என்ன சாதித்துவிட்டீர்கள்? (ஏ.பர்நாபாஸ்,பம்பாய்.75)***

கே. பாலசந்தர்: ஏன் சார் வம்புக்கிழுக்கறீங்க? சோ எவ்வளவோ சாதிச்சிருக்கார். ஆனு நானும் எத்தனையோ சாதிச்சிருக்கிறதா செ.ல்ல மாட்டேன். அடக்க சுபாவம் என்னைத் தடுக்கிறது. சமீ.த்தில் இல்லஸ்டிரேடட் வீக்லியில் '50 முக்கியமான இந்தியர்கள்' என்றதொகுப்பில்'சோ'வையும் சேர்த்திருந்தாங்க. அதுக்காக சந்தோஷப் பட்டேன். பெருமைப்பட்டேன்; என் சந்தோஷத்தை சோவுக்குத் தெரிவிச்சு, ஒரு கடிதமும் கூடப் போட்டேன்.

**கே. பாலசந்தர்**

**கேள்வி (24): முழுவதும் ஊமைகளை வைத்து, உணர்ச்சிமயமான படம் தயாரிக்க உங்களால் முடியுமா? (எஸ். மங்கை, ஹைதராபாத்–43)**

கே. பாலசந்தர்: நீங்க சொல்ற ஐடியா நல்லா இருக்கு. திரைக்கதைக்குன்னு ஒரு பரீட்சை வெச்சா, இது நல்ல கேள்வி. ஆனா கமர்ஷியலா நான் பாஸ் பண்ணுவனான்னு சந்தேகம்தான். இருந்தாலும் நான் இந்த சவாலை ஏத்துக்கறேன், உழைக்கத் தயாராய் இருக்கிறேன் — நீங்க பணம் போடத் தயாராய் இருந்தால்.

**கேள்வி (25): 1938ல் பிறந்த நான் ஒரு கதை விஷயமாய் உங்களிடம் 'ரகசியம்' பேச வேண்டும். முடியுமா? (பி. காதர், திருச்சி–1)**

கே. பாலசந்தர்: ஏன் ரகசியமா பேசணும்னு எனக்குப் புரியலே! பயமாயிருக்கு (சிரிப்பு). ஒரு வேளை உங்க சொந்த வாழ்க்கைல நடந்த விஷயங்களைப் பத்தி கதை, கதையா என்கிட்ட சொல்லணும்னு விரும்பறீங்களா? அல்லது உங்கள் கதையையே கதையாக்கணும்னு பார்க்கறீங்களா? எனக்குக் குழப்பமா இருக்கு! உங்களுக்கு எக்ஸைட்டிங்கா இருக்கிற பல விஷயங்கள், மற்றவர்களுக்கும் எக்ஸைட்டிங்கா இருக்கணும்கிற அவசியம் இல்லே.

**கேள்வி (26): ஆஸ்கார் பரிசு பெறுமளவுக்குத் தாங்கள் ஒரு படத்தைக் கதை, வசனம் எழுதி இயக்கினால் என்ன? (மதுரை. ராஜசேகரன், லால்குடி)**

கே. பாலசந்தர்: ஆஸ்கார் பரிசுங்கறது மேல் நாட்டுக்காரங்களுக்கு ரொம்பப் பெரிசா இருக்கலாம். நம்மகிட்டயும் தங்கத் தாமரை பரிசு இருக்கே! இதை ஏன் ஆஸ்காருக்கு ஈடானதாய்க் கொள்ளக் கூடாது? ஆஸ்காருக்கு எந்த விதத்திலும் குறைந்தது இல்லே தங்கத் தாமரை பரிசு. அதுக்கு ஏன் முயற்சி பண்ணலேன்னு கேட்டா, பதில் சொல்லியிருப்பேன். நீங்க கேட்கலே; நானும் பதில் சொல்லலே.

(இங்கே, ஆஸ்கார் பரிசு ஆங்கிலப் படங்களுக்கு மட்டுமே உரியது; அதற்கு நாம் போட்டி போடவே முடியாது; இது இங்கே ரொம்பப் பேருக்குத் தெரிவதில்லை என்கிற கருத்து தெரிவிக்கப்பட்டது).

**கேள்வி (எஸ்.வி.ரமணன்): சரிசார், அவருக்குப் பதிலா நான் கேட்கிறேன். நீங்கள் தங்கத் தாமரை பரிசுக்கு முயற்சி பண்ணினால் என்ன?**

கே. பாலசந்தர்: பண்ணலாம். நிச்சயம் பண்ணுவேன். எப்படி கமர்ஷியல் படத்துக்கு ஒரு ஃபார்முலா இருக்கோ, அதே மாதிரி தங்கத் தாமரை படத்துக்கும் ஒரு ஃபார்முலா இருக்கு. ரொம்ப ஸ்லோவா இருக்கணும்; அவசரமா எல்லாம் பேசக் கூடாது. அந்த ஃபார்முலாவை இப்ப சீரியஸா ஸ்டடி பண்ணிக்கிட்டிருக்கேன். அது முடிஞ்சதும் நிச்சயம் டிரை பண்ணுவேன்!

**கேள்வி (27): கமல், ரஜினி, ஸ்ரீதேவி போன்ற பெரிய பெரிய நட்சத்திரங்களை திரையுலகிற்கு உருவாக்கித் தந்த தாங்கள், மனோரமாவுக்கு இணையான ஒரு நகைச்சுவை நடிகையை இதுவரை ஏன் உருவாக்கித் தர முயலவில்லை? (மு. மதிவாணன், அரூர்)**

கே. பாலசந்தர்: உண்மைதான். இதை ஒரு தோல்வியாகவே, ஒரு விழா மேடையில் நான் ஒப்புக் கொண்டிருக்கிறேன். மனோரமாங்கறது வெறும் நடிகை மட்டுமில்லே. ஒரு ஃபினாமினன். சிவாஜி, எம்.ஜி.ஆர். மாதிரி 30, 40 வருடங்களுக்கு ஒரு தடவைதான் இது மாதிரி ஃபினாமினன்கள் தோன்றக் கூடும். இன்னொன்று தெரியுமா? மனோரமாவை வெறும் நகைச்சுவை நடிகையாத்தான் நீங்க பார்க்கறீங்க. உங்களைப் பார்த்து நான் பரிதாபப்படறேன். மனோரமா இதுக்கெல்லாம் மேலே.

**கேள்வி (28): அனுபவமுள்ள டைரக்டரான நீங்களும் கத்துக்குட்டி டைரக்டரும் எடுத்த படங்கள் ஒரே சமயம் வெளியாகி, உங்கள் படம் ஓடாமல், அவர் படம் ஓகோ என்று போகிறது. அந்த நேரத்தில் அந்தப் புதிய டைரக்டர் தங்களைக் காண வந்தால்? (அ. சுப்ரமணியன், சேலம்–5).**

கே. பாலசந்தர்: நல்ல கேள்விதான். அதாவது நான் உள்ளுக்குள் பொருமைப் படுவேன்; வெளியில வாழ்த்துவேன்னு நினைக்கறீங்க நீங்க. ஐ'ம் ஸாரி! அவர் படமாவது ஓடுதேன்னு சந்தோஷப்படுவேன்! (சிரிப்பு). என்னைச் சந்திக்கிற புது இயக்குநர்கள் வழக்கமா சொல்கிற முதல் வார்த்தையே, "நீங்கதான், அந்தக் காலத்துல இருந்தே என் மானசீக குரு". இதைவிட வேற என்ன சந்தோஷம் வேணும் எனக்கு?

**கேள்வி (29): இந்தியா ஒரு விவசாய நாடு. இங்குள்ள விவசாயிகளின் வாழ்க்கையைப் பின்னணியாக வைத்து நீங்கள் ஏன் படமெடுக்கக் கூடாது? (ஆர். சீனிச்சாமி, சென்னை–10).**

கே. பாலசந்தர்: எடுக்கலாம். அதாவது, விவசாயிகளை வெச்சு படம் எடுக்கணும்னு சொல்லும் போது, அதுல ஒரு நல்ல மையக் கருத்து உதயமாகணும்; நல்ல உணர்ச்சிகரமான தரெட் கிடைக்கணும் — 'தோ பிகா ஜமீன்' மாதிரி. கிடச்சா நிச்சயம் எடுப்பேன்; அதை நான் பெருமையா நினைப்பேன்.

தொகுப்பு: **மௌஷ்மி**

மேலட்டை வண்ணப்படம்: **யோகா**

பாலசந்தர், மனைவி ராஜம், மகன் வித்யாமந்திரில் பத்தாம் வகுப்பு முடித்துள்ள பிரசன்னா.

ஃபினாமினன்



பாராட்டு • தகுதியுள்ள மனங்களை ஊக்குவிக்கும். • தகுதியற்ற மனங்களுக்கு அதுவே குறிக்கோள்.
—சார்ல்ஸ் டி. காலெப்

4

ராஜாஜி

வாழ்க்கை வரலாறு.

ராஜ்மோகன் காந்தி.

# சேலத்தில் மதுவிலக்கு



• சத்தியமூர்த்தி.

ஸி. ஆரின் மந்திரி சபையில் அவரைத் தவிர மொத்தம் ஒன்பது பேர் இருந்தனர்.

ஆந்திரப் பகுதியைச் சேர்ந்த காங்கிரஸ் தலைவர்களுள் மிகப் பிரபலமான டி. பிரகாசம், வி. வி. கிரி மற்றும் கோபால ரெட்டி தெலுங்கு மாகாணங்களின் பிரதிநிதிகள். பி. சுப்பராயன், டி. எஸ். எஸ். ராஜன், எஸ். ராமநாதன், முனிசாமி பிள்ளை ஆகியோர் தமிழ் வட்டாரங்களின் பிரதிநிதிகள். இவர்களுள் பிள்ளை ஹரிஜனாகவும் இருந்தார். மலபாரிலிருந்து ஸி. ஆர்., ரமண மேனனைத் தேர்ந்தெடுத்தார். (ரமண மேனனின் மறைவையடுத்து சி. ஜே. வர்கி.) யாகுப் ஹாஸன் மந்திரி சபையின் முஸ்லிம் உறுப்பினர். எல்லாப் பிரிவினருக்கும் பிரதிநிதித்துவம் அளித்த சிறந்த அமைச்சரவை தான். ஆனால் சத்தியமூர்த்திக்கு மந்திரி சபையில் இடமளிக்காதது பரவலாக ஏமாற்றத்தைத் தோற்றுவித்திருந்தது. ஸி. ஆர். சட்ட சபையில் இடம் பெற வேண்டும் என்பதற்காகவே தமக்கிருந்த வாய்ப்புக்களைத் தியாகம் செய்திருந்தார் சத்தியமூர்த்தி. அமைச்சரவையில் அவரைசேர்த்துக்கொள்ளாதது ஸி. ஆரின் நன்றியறிதலின்மையைக் காட்டுவதாகக் கருதப்பட்டது. சத்யமூர்த்தி தகுதியுடையவரானாலும், அவருடைய வெளிப்படையான பேச்சும் தனித் தன்மையை விரும்பும் குணமும் மந்திரி சபையின் ஒற்றுமைக்கு விளைவிக்கக் கூடிய பாதிப்புக்களைப் பற்றி ஸி. ஆர். சிந்திக்க வேண்டியதாய் இருந்தது.



• சுப்பராயன்.

ராஜாஜியின் மந்திரி சபையில் சுப்பராயன் மட்டுமே முன் அனுபவம் உள்ளவர். அமைச்சர்களில் பிரகாசம் மட்டுமே ஸி. ஆரின் முடிவுகளைக் குறித்துச் சிலபோது கேள்விகளை எழுப்பினார்.

தம் சகாக்களில் பெரும்பாலோருக்கு ஸி. ஆர். ஆசானாக விளங்கி வழி காட்டினார். தேவைப்படும் சமயங்களில் அவர்கள் தங்கள் இயலாமையை வெளிப்படுத்தும் முன்னரே — அவர்களுடைய வேலையைத் தாமே இழுத்துப் போட்டுக் கொண்டு செய்து விடுவார். "நீங்கள் ஏன் பிறருடைய துறைகளையும் கவனிக்கிறீர்கள்?" என்று காந்தி ஒரு முறை கேட்டார். "என் சுபாவத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ளும் கலையை இன்னும் நான் கற்கவில்லை" என்று ஒப்புக் கொண்டார் ஸி. ஆர். அவருடைய இயல்பு அவரை உந்தியது.

அன்றைய சபாநாயகர் புலுசு சாம்பமூர்த்தி. கிழக்கு கோதாவரி பக்கத்தைச் சேர்ந்த வக்கீல். ஸி. ஆரையும் பிரகாசத்தையும் போல் இவர் காந்திய இயக்கத்தில் சேர வக்கீல் தொழிலை கைவிட்டிருந்தார். குள்ளமானவர்தான். ஆனால் உறுதியான தெளிவான குரலில் பேசுவார் சாம்பமூர்த்தி. கோட், மேல் சட்டை, டர்பன், ஆகியவற்றைக் கைவிட்டு வேட்டியும் திறந்த மார்பில் போர்த்திய அங்கவஸ்திரமுமாக அவைக்கு வருவார். சட்டசபைக் கூட்டங்கள், ஸி. ஆருக்குக் கல்லூரி நாட்களிலேயே பழக்கமாகியிருந்த பல்கலைக்கழக செனட் மண்டபத்தில் நடைபெற்றன. வெளி மனிதர்களுக்குத் தனி இருப்பிடம் இருந்தது. தவிர வெளியே திறந்த வெளியில் குழுமியிருந்தவர்களுக்கு விவாதங்களைக் கேட்க ஒலி பெருக்கிகள் வசதி செய்தன. முதல் நாள் நடவடிக்கைகளைப் பற்றி ஒரு பார்வையாளர் எழுதினார்: "ஆண்களும், பெண்களுமாய் அரங்கு நிரம்பி வழிந்தது. வழக்கமான சம்பிரதாயப் பாணியிலன்றி எல்லோரும் வித விதமான கதர் ஆடைகளை அணிந்திருந்தனர். அங்கிருந்த ஒரு சில ஐரோப்பியர்கள் தாங்கள் ஸூட்டும் டையும் அணிந்திருந்ததற்காக வருந்துவது

மணவாழ்க்கையில் வெற்றி சரியான துணையை கண்டுபிடிப்பதில் மட்டும் இல்லை. சரியான துணையாக இருப்பதிலும் உள்ளது.

—ராபி பி. ஆர். பிக்னர்.

போல் தோன்றினர். ஆட்சி அதிகாரத்தின் மையப்பீடத்தை ஒருவழியாக மக்கள் குத்தகைக்கு எடுத்து விட்டது போலவே தோன்றியது.

ஸி. ஆர். தன் மந்திரி சபைக்கு மட்டுமன்றி சட்டசபை உறுப்பினர்களுக்கும் குருவாக விளங்கி பயிற்சி அளித்தார். எம். எல். ஏக்களுக்கு மைக்கில் எப்படிப் பேசுவது என்பது முதல் பாராளுமன்ற அரசியல் பண்பாடு வரை அனைத்தையும் சொல்லிக் கொடுத்தார். முதல் கூட்டத்திலேயே சபாநாயகரை எதிர்க் கட்சியினரின் உரிமைகளைக் காக்குமாறு கேட்டுக் கொண்டார். தம் கட்சியினரிடம் எதிர் கட்சி உறுப்பினர்களின் சொந்த விஷயங்கள் பற்றி தனிப்பட்ட முறையில் ஏதும் குறிப்பிட்டுப் பேசக் கூடாது என்று பணித்தார். அவைக்கு வராத மந்திரிகளை வெளிப்படையாகவே கண்டித்தார். 'அவர் வராததற்குச் சரியான காரணம் ஒன்றும் என்னிடம் தெரிவிக்கப்

தயாராயில்லை. தமது பண்பு மிகுந்த நடத்தையாலேயே எதிர்க் கட்சியினரைத் திணற அடித்துத் திருப்திப் படுத்தி விடுவார் ஸி. ஆர்.

சாம்பமூர்த்தி அவையின் அலுவல்களை வந்தே மாதரம் கீதத்துடன் துவங்க வேண்டும் என்று விரும்பினார். முஸ்லீம் லீக் உறுப்பினர்கள் இதை எதிர்த்தார்கள். பாடலின் சில பகுதிகள் இஸ்லாமிய கொள்கைகளுக்குப் புறம்பானதாய் இருந்தன என்றனர். (சில முஸ்லீம் அறிஞர்கள் இதை மறுத்தார்கள்). ஸி. ஆர். இப்பிரச்னைக்குத் தீர்வு காணும் வகையாய் பாட்டை, அவை அலுவல்கள் பதினோரு மணிக்குத் தொடங்குவதற்குச் சற்று முன்னாலேயே பாடி விடலாம் என்றார். விருப்பமுள்ள உறுப்பினர்கள் மட்டுமே அந்தப் பிரார்த்தனையில் கலந்து கொள்ளலாம். வேறு பல மதங்களிலிருந்தும் பிரார்த்தனைகளைச் சேர்த்துக் கொள்ளலாம். ஆனால் எதிர்ப்பு தொடர்ந்தது; இந்தப் பழக்கம் காங்கிரஸ் ஆட்சி உண்மையில் ஹிந்துக்களின் ஆட்சியே என்று உணர்த்து


• வி.வி. கிரி.


• பிரகாசம்.


• கோபால ரெட்டி.


• டி. எஸ். எஸ். ராஜன்.

படவில்லை; வருந்துகிறேன்' என்று ஒரு மந்திரியைப் பற்றி பகிரங்கமாய்க் கூறினார்.

இந்தியாவிலுள்ள ஐரோப்பியர்களை 'ரத்த உறிஞ்சிகள்' என்றும் பிறரிடமிருந்து சத்தை உறிஞ்சி வாழ்பவர்கள் என்றும் வர்ணித்த தமது கட்சி உறுப்பினர்கள் சிலரைக் கண்டித்தார். இந்திய கிறிஸ்துவ உறுப்பினர் எம். ஜே. சாமுவேல், தாம் தமது சமூகத்தினருக்காக மட்டுமன்றி எல்லார் சார்பாகவும் பேசுவதாகக் கூறியதைப் பாராட்டினார்.

"எதிர்க்கட்சியை வலிவும் முக்கியத்துவமும் உடையதாகக் கருதுகிறேன். அதற்கு மரியாதை செலுத்துகிறேன். அதனால்தான் நான் பல திருத்தங்களை ஏற்றுக் கொண்டுள்ளேன்"—கடன் நிவாரணச் சட்டம் பற்றிய விவாதத்தின் போது இப்படி பேசினார் ஸி. ஆர்.. இது எதிர்க் கட்சியைப் பற்றிய ஸி. ஆரின் உண்மையான மனப்பான்மையை வெளிப்படுத்தும் அதே நேரத்தில் அவர் பலவீனமானவர் என்ற ஒரு தவறான எண்ணத்தையும் தோற்றுவித்து விடக் கூடும். அரசு கொண்டு வரும் சட்ட மசோதாக்களில் எதிர்க் கட்சியினர் கூறும் முன்னேற்றகரமான மாறுதல்களை ஏற்கத் தயாராய் இருந்த போதும் அவற்றின் அடிப்படையைச் சற்றும் விட்டுக் கொடுக்க அவர்

வதாக லீக் குற்றம் சாட்டியது. இறுதியில் ஸி. ஆர். சபாநாயகரிடம் இந்தப் புதிய ஏற்பாட்டைக் கைவிடுமாறு கேட்டுக் கொண்டார். யோசித்துப் பார்க்கையில் இந்த ஏற்பாட்டினால் நன்மையை விடத் தீமையே அதிகம்.

ஸி. ஆர். பதவி ஏற்று மூன்று மாதங்களுக்குள், 1937 அக்டோபர் 1 முதல் அவரது சொந்த மாகாணமான சேலத்தில் மது விலக்கு அமலுக்கு வந்தது. படிப்படியாகப் பிற மாகாணங்களுக்கும் விரிவுபடுத்தும் திட்டம் அறிவிக்கப்பட்டது. இதனால் அரசின் வருவாயில் கணிசமான தொகை குறைந்து போயிற்று; நில்வரியும் கள்ளுக் கடை ஏலமுந்தாம் அரசின் வருமானத்தில் பெரும் பகுதி. இருப்பினும் ஸி. ஆர். 1937 இல் ஓர் உபரி பட்ஜெட்டையே வழங்கினார். அடுத்த இரண்டு வருடங்களிலும் அவ்வாறே வழங்க இருந்தார். எதிர்க் கட்சி எம். எல். ஏ. யான அப்பாதுரைப் பிள்ளை 'விவரங்களைப் புரிந்து கொள்ளும் ஸி. ஆரின் திறனையும், பொருளாதார நுணுக்கங்களனைத்தையும் அறிந்திருந்த நேர்த்தியையும்' வியந்து போற்றினார்.

(தொடரும்)

தமிழாக்கம்: சீதாரவி.



அமரர் கல்கி

# நினைவுச் சிறுகதைப் போட்டி-1985

அமரர் கல்கி அவர்களின் நினைவாக ஆண்டுதோறும் நடக்கும் இந்தச் சிறுகதை போட்டியில் வழக்கம்போல் இந்த ஆண்டும் எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

| | | |
|---|---|---|
| முதல் பரிசு | | ரூ 1000 |
| இரண்டாவது பரிசு | | ரூ 500 |
| மூன்றும் பரிசு | (இரு கதைகளுக்கு தலா ரூ 250 வீதம்) | ரூ 500 |

ஆக மொத்தம் ரூ 2000 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

* கதைகள் சொந்தக் கற்பனை என்றும், கதை வேறு எந்த உருவிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.

* அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதி மொழி தர வேண்டும்.

* நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

கதைகளை அனுப்ப வேண்டிய கடைசி தேதி: ஜூன் 15

* உறையின் மேல் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி என்று குறிப்பிடுதல் அவசியம்.

* பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

* கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

* எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

* சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

* போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 4 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.

ஆசிரியர், கல்கி, சென்னை—600 032.

# மௌனப் புயல்

## வாஸந்தி

### 4

பிலியனில் ரஞ்சனி உட்கார்ந்ததும் சியாம் கிஷோர் மோட்டார் சைக்கிளைக் கிளப்பிய வேகத்தில் ஆத்திரம் வெளிப்பட்டது. பேட்டி தனக்குள் ஏற்படுத்தியிருந்த ஏமாற்றத்தை விழுங்கியபடி ரஞ்சனி மெல்லிய புன்னகையுடன், "ஈஸி சியாம்!" என்றாள்.

வண்டி கிளம்பி, ஜனசஞ்சாரமில்லாத பிரதான சாலையை அடைந்த பிறகும் சியாம் எதுவும் பேசாமல் மௌனமாகத் தீவிர யோசனையில்இருப்பவனைப்போலத்தனக்கு நேர் எதிராக இருந்த பாதையைப் பார்த்தபடி ஓட்டினான். ஒரே ஒருமுறைபக்கவாட்டில் திரும்பி, "உன்னை உன் வீட்டில்தானே ட்ராப் செய்யணும்" என்று கேட்டுக்கொண்டான்.

கர்தார் ஸிங்கின் மேலெழுந்தவாரியான பேச்சும் அர்த்தமில்லாத பரிகாஸமும் நினைவுக்கு வரும்போதெல்லாம் எரிச்சல் ஏற்பட்டது. படித்தவன், எழுத்தாளன் ஒருநிர்ப்பந்தத்துக்கு உட்பட்டவன் போலப் பேசியதாகத் தோன்றிற்று. உண்மையிலேயே தன் மனத்துள் தோன்றுவதைச் சொல்லப் பயப்படுகிறானா அல்லது அரசின் இந்தச் செயல் தன் இனத்தாரை எந்த அளவுக்குப் பாதிக்கும் என்கிற கலவர உணர்வில் கண்டனம் தெரிவிக்கிறானா? அந்த விளையாட்டுப் பேச்சுக்குப் பின்னணியில், அந்தப் பார்வையில், ஒரு சோகம் இருந்தாற்போல் அவளுக்குத் தோன்றிற்று. இன்று காலையில் ருமாவின் அப்பாவின் கண்களில் தெரிந்த அதே சோகம்; கீற்றாய்த் தெரிந்த அதே கோபம். அவர் வெளிப்படையாகக் கண்டனம் தெரிவிக்காதது வேறு ஒரு நிர்ப்பந்தத்தால்...

சட்டென்று ஒரு விஷயம் மூளையை உலுக்கிற்று.

இன்றைக்கு இந்த இனம், ஒருநாள் போது முடிவதற்குள் வித்தியாசமாகத் தனித்து நிற்கிறது...

இன்று காலையில் ருமா தன்னையறியாமல் 'எங்களுக்கு' என்று சொன்ன வார்த்தைக்கும், மன்மோஹன் ஸிங் இதுவரை தொடர்பு கொள்ளாததற்கும் இதுதான் காரணம். எதிர்பாராமல் பிரக்ஞையைத் தாக்கிய மாதிரி அவள் திடுக்கிட்டாள்.

காட்... இப்படிப்பட்ட ஒரு வித்தியாசத்தை ருமாவும், மன்மோஹனும் உணர ஆரம்பிப்பார்களா? அவளிடம் காண்பிப்பார்களா? பேதத்தைப் பற்றிய சிந்தனையோ உணர்வோ இல்லாமல் பழகிய உறவையும் பிணைப்பையும் மறப்பார்களா? பதினைந்து வருஷங்களாக ருமாவும் அவளும் ஒன்றாகப் படிப்பவர்கள், ஒரே மாதிரியான எண்ணங்களும் ரசனையும் கொண்டவர்கள். ருமாவுக்குத் தீவிரமான கொள்கைகள் இல்லை, தன்னுடைய அரசியல் தத்துவங்களில் அவளுக்கு ஈடுபாடு இல்லை என்று ரஞ்சனிக்குச் சில சமயம் தோன்றும்.

அப்படிப்பட்டவளை நேற்றைக்கு நடந்த விஷயம் மாற்றிவிடுமா?

மன்மோஹன் ஸிங் நிச்சயம் வித்தியாசமாக நடந்து கொள்ள மாட்டான் என்று அவள் தனக்குள் நினைத்துக் கொண்டாள். தீவிர முற்போக்குவாதி, மதச்சார்பில்லாதவன். அவளுக்கு அவனைத் தன் உள்ளங்கையைப் போல் தெளிவாகத் தெரியும். அவனைப் பற்றி நினைக்கும் போதே மனத்தில் ஒரு சந்தோஷம் பொங்கிற்று.

மோட்டார் சைக்கிளின் வேகம் மெல்ல மெல்லக் குறைந்து அவள் வீட்டின் எதிரில் நின்றது. சியாம் கிஷோர் என்ஜினை அணைக்காமல், லேசாகப் புன்னகை செய்து,

"வரட்டுமா?" என்றான்! "நாளைக்குக் கட்டுரையோடு ஆபீஸில் உன்னை எதிர்பார்க்கலாமா?"

"ஹோப்ஃபுலி! நீ இந்தப் பேட்டியைப் பத்தி என்ன நினைத்தாய் என்று சொல்லவில்லையே? ஐ வாஸ் டிஸப்பாயின்டெட்," என்றாள் அவள்.

என்ஜினை அணைத்துவிட்டு அவன் அவளைப் பார்த்துச் சிரித்தான்.

"ஐ ஆம் நாட்!" என்றான்.

"வேறு என்ன எதிர்பார்த்தாய் அவன் சொல்வான் என்று? நீ 'ஸிக்'காக இருந்திருந்தால் நீயும் அறிந்திருப்பாய்."

"ஐ டோன்ட் நோ!" என்றாள் அவள்.

"ஐ நோ!" என்றான் சியாம் தீவிரமாக. "அவனை மாதிரி சப்பைக் கட்டுக்கட்டுகிறேன் என்று உளறியிருக்க மாட்டாய்.

அவ்வளவுதான். ஆனால் அதிர்ந்திருப்பாய். என் அம்மா 'சீக்' என்னுடைய அப்பா பஞ்சாபி ஹிந்து. என் மாமாக்கள் எல்லோரும் சீக்கியர்கள். எங்களில் வித்தியாசமே இருந்ததில்லை — இதுவரையில்.''

அந்தக் கடைசி வார்த்தையில் இருந்த அழுத்தத்தையும் சோகத்தையும் கவனித்து ரஞ்சனி வியப்புடன் அவனைப் பார்த்தாள்.

''இன்று காலையிலிருந்து ஏற்பட்டுவிட்டது ரஞ்சனி! ஐ கான் ஆல்ரெடி ஃபீல் இட். வீட்டுக்குள்ளேயே சுவர் எழும்பிவிட்டது. செய்தி கேட்டதிலிருந்து என் அம்மா சாப்பிடவில்லை. அப்பாவுக்கு அரசாங்கம் செய்ததுதான் சரி என்கிற எண்ணம். ஆனால் அம்மாவின் மனநிலை உணர்ந்து வாயைத் திறக்கவில்லை. திறந்தால் வீட்டில் நிம்மதி போய்விடும்!''

சியாம் சோகத்தோடு சிரித்தான். ''இட் இஸ் டூ பாட். டூ பாட். என் அம்மாவோடு நிறைய முறை பொற்கோவிலுக்குப் போயிருக்கிறேன். அவர்களுக்கெல்லாம் கோவிலுடன் இருக்கும் பிணைப்பு அபூர்வமானது. ஆனால் அங்கு நிலைமை ரொம்ப மோசமாகப் போயிருந்தது. எனக்குத் தெரியும் ராணுவப் பிரவேசத்தைத் தவிர வேறு வழி இருக்கவில்லை.''

ரஞ்சனி பதில் ஏதும் பேசாமல் தீவிரமான பாதிப்பை அடைந்திருந்தும் புன்னகை மாறாமல் பேசும் அவனை யோசனையுடன் பார்த்தாள்.

''கர்தார் ஸிங் சொன்ன ஒரு விஷயம் நானும் நம்புகிறேன் ரஞ்சனி'' என்றான் அவன். ''இதன் விளைவு ரொம்ப மோசமாகத்தான் இருக்கப் போகிறது!''



. அவன் சட்டென்று சுயநினைவு. வந்தவனும் எஞ்சினை முடுக்கிவிட்டான். அதன் சத்தத்துக்கு இடையே சிரித்துக் கொண்டே சொன்னான்.

"நல்ல வேளை நீ ஒரு 'சீக்'கும் இல்லே. பஞ்சாபி ஹிந்துவும் இல்லே — தாங்க் யுவர் ஸ்டார்ஸ்!"

அவளது பதிலுக்குக் காத்திராமல் அவன் கிளம்பிப் போவதை அவள் சில விநாடிகள் குழப்பத்துடன் பார்த்தாள். என்றால் இவர்களது உணர்வலைகளைப் புரிந்து கொள்ள முடியுமா என்று எட்டிப் பார்த்த புதிய கவலையுடன் வீட்டை நோக்கித் திரும்பியதும் அம்மா நிலைப்படியில் நிற்பது தெரிந்தது. அம்மாவின் பார்வையில் சந்தேகமும் கடுப்பும் தெரிந்தன.

"வந்தவுடனே வீட்டுக்குள்ளே வர வேண்டியதுதானே? வாசல்லே என்ன ஒன்றரை நாழி பேச்சும் சிரிப்பும்?" ரஞ்சனிக்கு வந்த கோபத்தில் பதில் சொல்ல ஆரம்பிக்கையில் முகப்பறையில் மன்மோஹன் ஸிங்கின் உருவம் தெரிந்தது. சட்டென்று அம்மாவின் பேச்சு மறந்து அவள் முகம் மலர்ந்து போயிற்று.

"அந்த சர்தார்ஜி பையன் வேற அரை நாழியா உக்காந்துண்டிருக்கான்.. சட்டுபுட்டுனு பேசி அனுப்பு. எனக்குச் சாப்பாட்டுக் கடையாகணும்."

"அதுக்கென்ன! அவனையும் இங்கே சாப்பிடச் சொன்னா போறது!"

அம்மா ஒரு முறைப்பு முறைத்தாள். "நான் இன்னிக்கு எதையும் ஸ்பெஷலாச் செய்யல்லே. வத்தக் குழம்பும்..."

"யாருக்கு வேணும் ஸ்பெஷல்? அவனுக்கு வெறும் ப்ரெட்டும் வெண்ணெயும் கூடப் போறும்!"

அவளைக் கண்டதுமே மன்மோஹனின் கண்களில் சிரிப்பில் சினேகிதமும் பரிவும் பளிச்சிட்டன. இன்று ஒரு தயக்கமும் தெரிவதாக அவள் நினைத்துக் கொண்டாள்.

"ஹாய், 'யார்'!" என்று அவன் சிரித்தான். "எப்பொழுதிலிருந்து நீ இப்படி இரண்டாந்தர ஜர்னலிஸத்துக்கு இறங்கினே?"

அவள் தோளைக் குலுக்கிச் சிரித்தாள். "எனக்கு வேறு சாய்ஸ் இல்லே. எடிட்டர் போன்னு சொன்னார். போனேன். பஞ்சாபி இலக்கிய வட்டத்திலே கர்தார்ஸிங் ஒரு பெரிய புள்ளியா, இல்லேயா?"

"புல்ஷிட்!" என்றான் அவன் அடிக்குரலில். "இவர்களில் முக்கால் வாசிப்பேர்கள் கொள்கை இல்லாதவர்கள். கோழைகள்."

"அவர் ஒரு சரியான ஜோக்கர் மாதிரி நடந்து கொண்டார் மன்மோஹன். பாதி சமயம் அவர் சொல்வதை அவரே நம்பவில்லே என்று எனக்குத் தோன்றிற்று."

"அவர் என்ன சொல்லியிருப்பார் என்று எனக்குத் தெரியும் ரஞ்சனி! உன்னுடைய எடிட்டருக்கும் தெரியும். சுடச்சுட இந்தப் பேட்டியைப் போட்டால், ஸர்குலேஷன்

"என்னப்பா பால்ய நண்பா! பார்த்து ரொம்ப வருஷமாச்சு. இப்ப என்ன வேலெ செய்யறே?"




கொஞ்சம் அதிகரிக்கும். இல்லாவிட்டால் எடிட்டருக்குப் பஞ்சாப் பிரச்னையைப் பற்றி என்ன உண்மையான கவலையா?"

அவள் தீவிர யோசனையுடன் மன்மோஹனைப் பார்த்தாள். வழக்கத்திற்கு மாறாக அவன் முகம் இன்று உணர்ச்சிவசப்பட்டிருந்தது. கூரிய கண்களில் ஒரு பளபளப்பு தெரிந்தது. புதிதாக, அவளுக்குப் பழக்கமில்லாத ஒரு அடி மனத்துத் துக்கத்தை வெளிப்படுத்திற்று.

"பஞ்சாப் சரித்திரம் முழுவதும் தப்புக்கள் நிறைந்த சரித்திரம் 'யார்'! அந்தத் தப்புக்கள் சில பத்திரிகைகளால் செய்யப்பட்டவை. ஹிந்துக்கும் 'சீக்'குக்கும் இடையே துவேஷத்தைப் பரப்பியவை. இந்த உன்னுடைய பேட்டியும் அந்தப் பிளவைத்தான் காட்டப் போகிறது. ஒட்டு மொத்தமாகச் சீக்கியர்கள் முதலில் சீக்கியர்கள் பிறகுதான் இந்தியர்கள் என்று காட்டப் போகிறது...

அவள் பதில் பேசாமல் சிறிது நேரம் அமர்ந்தாள். இவன் இன்று மிகவும் பாதிக்கப்பட்டிருப்பது புரிந்தது.

"அந்தப் பிள்ளை சாப்பிடறானான்னு கேளு" என்று அம்மா உள்ளேயிருந்து குரல் கொடுத்தாள்.

சாப்பாட்டு மேஜையில் ரமேஷ் தட்டுக்களை வைக்க ஆரம்பித்தான்.

"நீ சாப்பிட்டுட்டுப் போகலாம் மன்மோஹன்" என்றாள் ரஞ்சனி.

"இல்லே 'யார்' தாங்க்ஸ்!" என்றபடி அவன் எழுந்தான்.

"வீட்டிற்குப் போகணும். அம்மாவும் அப்பாவும் காலேயிலிருந்து சாப்பிட்டார்களா என்னன்னு தெரியாது."

அவன் கூச்சத்துடன் சிரித்தான். "ராணுவம் கோவிலுக்குள்ளே நுழையக் கூடாதுன்னு நான் கிட்டத்தட்ட பிரார்த்தனை செய்

தேன் 'யார்', வேறே வழியில்லாத நிலைமை உருவாகி விட்டது என்று புரிஞ்சுக்கம்!''

அவன் வெளித் தாழ்வாரத்தை நோக்கி நடந்தபடி மெல்லிய குரலில் சொன்னான்.

''அப்படிப்பட்ட நிலைமையை உருவாக்கியது தவறு. அதற்குமேல், ஓ காட், இது!''

அவன் சற்றுநேரம் ஏதோ ஒரு காரணம் புரியாத சுய பச்சாதாபத்தில் தன்னை இழந்தவனைப் போல் நின்றான். அவள் மெல்லிய வியப்புடன் அவனைக் கவனித்தாள். அவன் தீவிரத்துடன் தொடர்ந்தான்.

''ஹூ நோ ஸம்திங்? இனிமேல் தர்க்கத்திற்கும் நியாயத்திற்கும் பஞ்சாபில் இடமிருக்கப் போவதில்லை. தெர் வில் பி நோ லாஜிக் ஆர் ரீஸன்! அரசியல்வாதிகளின் பயங்கர விளையாட்டினால் சராசரி எளிய நல்ல மனசு கொண்ட சீக்கியனும் மதவெறி பிடித்து அலையப் போகிறான்— இதுதான் என் பயம் 'யார்'!''

''பொறுப்பில்லாமல் பேசுகிறார்கள் தலைவர்கள் என்று சொல்லிக் கொள்பவர்களும்—'' என்றாள் அவள் மெல்ல.

மன்மோஹனின் முகத்தில்கோபம்பளிச்சிட்டது.

''முட்டாள்கள். அந்த முட்டாள்களை வேடிக்கை பார்த்து ஏமாளிகளாக்கும் மத்திய அரசு எத்தன்கள். இவர்களுக்கு நடுவில் மாட்டிக் கொள்பவர்கள் எளிய ஜனங்கள். ஓ. இதை வைத்து குருசரன் ஸிங் என்று ஒரு நாடகாசிரியர் அற்புதமாக நாடகம் எழுதியிருக்கிறார். நீ அவரைச் சந்திக்க வேண்டும் ரஞ்சனி. இரண்டாந்தர ரைட்டர்ஸைப் போய் நீ பார்க்கறே. உன்னை நான் அம்ருத்ஸருக்கு அழைத்துக் கொண்டு போறேன். குருசரன் ஸிங்குக்கு அறிமுகப்படுத்தறேன். கொஞ்சங்கூடபயமில்லாமல்பேசறஅபூர்வமான ஆள், அவர்.''

''வரேன் 'யார்',' என்றாள் அவள் ஆர்வத்துடன். ''எப்பப் போலாம்?''

''இன்னும் ஒரு வாரத்திலே அங்கே நிலைமையைப் பார்த்துக் கொண்டு போவேன்.''

சொன்னால் இவளுக்குப் புரியுமா என்று யோசிப்பவன் போல அவன் ஒரு விநாடி தயங்கினான்.

''நான் என்னை ஒரு 'சீக்'ன்னே நினைக்கிறதில்லே ரஞ்சனி. ஆனால் இன்றைக்கு எனக்கு ரொம்பக் கலங்கிப் போயிருக்கு மனசு. மத வெறியர்களும், அரசியல்வாதிகளும் சேர்ந்து ஒரு சமூகத்தை...''

அவன் சட்டென்று நிறுத்தினான். ''ஸாரி ரஞ்சனி. 'சீக் ஸைக்கி'யைப் புரிஞ்சுகண்டால் தான் என் பயம் உனக்குப் புரியும். அதைப் புரிஞ்சுக்கறது கொஞ்சம் கஷ்டம்.''

அவள் மென்மையாகப் புன்னகையை அள்ளி வீசினாள்.

''புரிஞ்சுக்கணும்னு ஆசைப்படறேன் மன்மோஹன். நீ சொல்வது எனக்குப் புரிகிறது.''

''என் பெற்றோர்கள் சீக் என்பதால் நான் சீக் இல்லே.''

''அதுவும் எனக்குப் புரிகிறது.''

அவன் அவளது கரங்களை அரை க்ஷணம் நெகிழ்ச்சியுடன் பற்றினான்.

பிறகு தன்னைச் சமாளித்துக்கொண்டு, ''அம்ருத்ஸருக்குப் போவதைப் பத்தி உன் எடிட்டரிடம் சொல்லு. அவரே அதற்கு ஏற்பாடு பண்ணனும் பண்ணுவார். உனக்கு கைடா நான் வரேன். குருசரன் வீட்டிலே தங்கலாம்.''

இன்றைக்குஎன்னவோ அவனைப்பார்க்க அவளுக்குப் பாவமாக இருந்தது. அபரிமிதமான பரிவு ஏற்பட்டது.

அவன் தெருவில் இறங்கி இருளில் மறையும் வரை பார்த்துக் கொண்டிருந்துவிட்டு அவள் உள்ளே நுழைந்த போது அவளுக்காகக் காத்திருந்தவர்போல் அப்பா ரேழியில் நின்றிருந்தார்.

''இதப்பார், இனிமே இந்த ஸர்தார்ஜி பையனோட எல்லாம் உனக்குச் சிநேகிதம் வேண்டாம்'' என்றார்.

அவள் பதில் பேசாமல் கேள்விக்குறியுடன் நின்றாள், திடீரென்று தாக்கப்பட்டாற்போல்.

''ஜெயின் கூடச் சொல்றார். ஒரு சீக்கியனையும் நம்ப முடியாது. இவன் ஒரு தீவிரவாதி இல்லேன்னு என்ன நிச்சயம்? பிந்திரன்வாலேயுடைய ஆள் இல்லேன்னு என்ன நிச்சயம்?''

முதலில் அதிர்ச்சி ஏற்பட்டது. பிறகு அவரது பேச்சின் அபத்தத்தை நினைத்துக் கடகட வென்று சிரிப்பு வந்தது. சிரிப்பு நின்றதும் கண்ணில்நீர்திரையிட்டிருந்தது. மன்மோஹனுடன் அமிருத்ஸருக்குச் சென்று குருசரன் ஸிங்கைப் பார்க்க வேண்டும் என்கிற எண்ணம் வலுப்பட்டது.

(தொடரும்)



''எங்களிடம் டி.வி. வாங்குபவர்களுக்கு இந்தி டு தமிழ் அகராதி ஒன்று இலவசமா தர்றோம்!''


ஞாயிறில்லை, விடுமுறையில்லை,
காலை முதல் மாலை வரை ஓய்விலா வேலை
அனைத்தையும் சகிப்பதோ, அருமை மனைவி,
உங்கள் குழந்தைகளின் அன்புத்தாய் !

உங்கள் வாழ்க்கைத் துணைவியை கேளுங்கள். அவர் வாழ்க்கைத் துன்பத்தைப்பற்றி உங்கள் மனைவிக்கும் கூட அன்றாட இல்லல்களிலிருந்து விடுதலையே இல்லாமல இருந்தால் அவர் வாழ்க்கை சலிப்படையக்கூடும். இதைத் தவிர்க்க, உங்கள் மனைவியின் பொழுதுபோக்கிற்காக ஒரு டிவியை வாங்குங்களேன் தினமும் டிவியில் கண்டுகளிக்க ஒளியும் ஒலியும், சினிமா, நாடகங்கள் போன்ற எத்தனையோ சுவாரஸ்யமான நிகழ்ச்சிகள். ஆதலால் உங்கள் அருமை மனைவிக்கு ஒரு டிவியை விட சிறந்த அன்பளிப்பாக ஏதும் இருக்க கூடுமோ? இனியும் சந்தேகம் ஏன்? வேண்டுமானால் டிவி வைத்திருக்கும் உங்கள் பக்கத்து வீட்டுக்காரரைக் கேளுங்களேன். ஒரு வேளை டிவியை இன்றே வாங்க இன்னும் பல முக்கிய காரணங்களை உங்களால் அறிந்துக் கொள்ள முடியும்!

இப்போது, நீங்கள் எந்த டிவியையும் வாங்கும் முன், அது நம்பகமானதா என்று உறுதி செய்து கொள்ளுங்கள். அதில் தெள்ளத்தெளிவான படத் தோற்றத்திற்கு நீங்கள் தனி முக்கியத்துவம் கொடுக்க வேண்டும். செய்தி வாசிப்பவரின் கண் இமைகள் கூட அதில் துல்லியமாகத் தெரிய வேண்டும். அதாவது சாலிடெரில் தெரிவதுபோல்! அணுகிடுவீர் சாலிடெர் வைத்திருப்போரை, அறிந்திடுவீர் அதன் சிறப்பம்சங்களை. அப்போது தெரியும் உங்களுக்கு ஏதனல் சாலிடெரே அனைவராலும் விரும்பப்படும் டிவி என்று!






# சாலிடர்

-தொல்லையில்லாத் தொலைக்காட்சி

# மழை நாளின் நினைவுகள்

பஜனையின் கடைசிக் கட்டத்தில் என்னை மங்களம் பாடச் சொன்னார்கள். ஒட்டாமல் பாடினேன் யசோதா இருந்திருந்தால்என்ன ஒரு நிறைவு கிடைத்திருக்கும். அந்த கணீர் குரல் இல்லாமல் பஜனை ஒரு நிறைவை எய்தவில்லை.

அப்போதுதான் யசோதாவை நாளைக்கே பார்த்து விடுவது என்று தீர்மானம் செய்து கொண்டேன். எண்ணம் செயலாயிற்று.

''வாங்கோ... வாங்கோ...'' என்றாள்.

யசோதாவுக்கு எப்போதுமே வரவேற்பு வாய் நிறைய இருக்க வேண்டும். முகத்தில் பிரகாசமாய் மஞ்சள் படிந்திருந்தது. காதோரம் மிக லேசான இள நரை மஞ்சளில் குளித்திருந்தது. நடு நெற்றியில் அகலமாய் சிகப்புப் பொட்டிட்டிருந்தது. மழமழவென்ற மஞ்சள் பட்டுச் சேலை உடலை சுற்றி இருந்தது. பூ தொடுத்துக் கொண்டிருந்தாள் அவள். நிஜமாகவே உள்ளங்கை அகலத்திற்கு சரிகை. சுண்டுவிரல் பருமனுக்கு நகை கழுத்தில் புரண்டு மார்பில் படிந்திருந்தது. அடி எடுத்து வைத்ததில் மெட்டி 'ணக்' 'ணக்' என்று கட்டியம் கூறியது. மெல்லப் படியேறினேன். பார்வையை கண்ணீர் மங்கலாக்கிக் கொண்டிருந்தது.

''நீ இல்லாமல் பஜனையும் பூஜையும் நடக்கற இடம் எனக்கு சூன்யமாப் படறது யசோதா. இந்த வெள்ளிக் கிழமை நீயும்



சுபா

பஜனைல வந்து கலந்துக்கணும்னு கூப்பிடற துக்காகத்தான் வந்திருக்கேன் யசோதா... ஆனு...'' எப்படி சொல்வது என்று தெரியாமல் தயங்கினேன்.

யசோதா என் உள்ளங்கைகளைப் பற்றிக் கொண்டாள்.

''ஆனு?'' அவள் முகத்துப் புன்னகை மாறாமல் இருந்தது.

''உள்ளே போகலாமா? நான் உங்கிட்ட கொஞ்சம் பேசணும்.''

யசோதா குனிந்து உள்ளே போனாள். முற்றம் தாண்டி கூடத்தில் ஓரத்தில் பாய் விரித்தாள்.

''உக்காருங்கோ மாமி.''

நான் கால்களை மடக்கிக் கொண்டு உட்கார்ந்தேன். ''யசோதா ...நான் சொல்றதைத் தப்பாப் புரிஞ்சிக்காம எடுத்துப்பியா?''

''சொல்லுங்கோ மாமி.''

இவளிடம் எப்படிச் சொல்வது என்று தயக்கமாக இருந்தது.

பங்கஜம் வேறு நேற்றே நீட்டி முழக்கியிருந்தாள்.

''யசோதாவா ...அவசெஞ்சகாரியத்துக்கு இந்த ஊர்ல விட்டு வச்சிருக்கறதே தப்பு. அகத்துக்காரன் போனப்பறம் குங்குமத்தை அழிக்கமாட்டேன், பூவை எறியமாட்டேன், தாலியை அறுக்கமாட்டேன்னு அழிச்சாட்டியம் பண்றவளை நம்மளோட சேர்த்துக்கறதாவது. அப்படி அவ வந்துதான் ஆகணும்னு தாலியை அறுத்துப்பிடறது ... குங்குமத்தை அழிச்சிப்படறது, பூவை எடுத்து தலையைச் சுற்றி வேண்டாம் உன் சங்காத்தம்னு தூரக்க எறிஞ்சிப்பிடறது ... அப்புறம் பேஷா வரட்டுமே ... யார் வேண்டாங்கறா?''

''என்ன யோசனை?'' என்றாள் யசோதா.

''அவர் போனப்புறமும் நான் ஏன் பூவும், பொட்டும், நகையும், பட்டுமா இருக்கேன், அதையெல்லாம்ச்சீன்னு ஒதுக்கிட்டா உங்களோட வந்து நானும் பூஜை புனஸ்காரங்கள்ல கலந்துக்கலாமே — அதானே சொல்ல வந்தது?''

யசோதா நூலைப் பிடித்துக் கையில் கொடுத்து, 'இந்தா, பட்டம் விடு' என்று சொல்லி விட்டாள்.

''நம்ப சாஸ்திரமெல்லாம் அப்படித் தானே சொல்றது?'' என்றேன் தயக்கமாக.

''புருஷன் போனப்புறம் அதையெல்லாம் எடுத்துரணும்னு தானே சொல்றது? அந்த நாள் வந்தவுடனே நானும் எடுத்துடுவேன் மாமி'' என்றாள் யசோதா.

''யசோ ... நீ ... உன் ஆம்படையான்?''

''அவர் இன்னும் இருக்கார் மாமி. இதே வீட்ல....''

''என்னம்மா சொல்றே நீ?''

''மொத மொதல்லே நாங்க இந்த ஜாகைக்கு வந்த வருஷம்; உங்க வீட்டுல நவராத்திரிக்குஎன்னைக்கூப்பிட்டிருந்தேளே ஞாபகமிருக்கா மாமி?''

''அதுக்கும், இதுக்கும்?''

''அந்தநாளைமறுபடியும்ஞாபகப்படுத்திப் பாருங்கோ. அப்புறம் நான் சொல்றேன்.''

* * *

அது ஒன்றும் அவ்வளவு சுலபமாய் மறக்கிற நாளில்லே.

அன்றைக்கும் வெள்ளிக் கிழமைதான். நவராத்திரியின் ஆறாவது ராத்திரி. அண்டை, அசல் எல்லாம் வந்து குங்குமத்தை நெற்றியில் இட்டுக் கொண்டு கிளம்பிப் போய் வீடு சற்றே வெறிச்சோட ஆரம்பித்திருந்த் நேரம். ரகுபதியும், 'அவரும்' கும்பகோணத்தில் ஏதோ விசேஷம் என்று சாயங்காலமே கிளம்பிப் போயிருந்தார்கள்.

சுவர் கடிகாரத்தில் மணி எட்டரை என்று பார்த்து விட்டு ஆரத்தி கரைக்க உள்ளே திரும்பிக் கொண்டிருந்தேன்.

தட் தட் என்று வாசல் கதவு அழைத்தது. கூடவே "மாமி" என்று ஒரு புஷ்பக் குரல். போய்த் திறந்தேன். கண் நிறைந்து போனது படியில் நின்றிருந்த அந்தப் பெண்ணின் அழகால்.

"ரொம்ப நாழியாய்டுத்தில்ல... கோயிலுக்குப் போயிருந்தேன்... அதான்."

"பரவால்லே. எதுக்கு அநாவசியமா வார்த்தையை விரயம் பண்றே. வா... வா."

உள்ளே வந்தாள். ஊருக்குப் புதிதாய் குடி வந்திருக்கிறவள். சாதுப் பெண் என்று முகம் முழுக்க எழுதியிருந்தது. மத்தியானம் பங்கஜம் வீட்டில் பார்த்து அழைத்தது. ஞாபகமாய், சுர்ம சிரத்தையாய் வந்திருந்தது.

"கொலு ரொம்ப அழகா இருக்கு மாமி." என்றாள்.

"சந்தோஷம். உனக்கு காலே வலிக்கறது. உன் பேர் யசோதான்னு தானே சொன்னே?"

"ஆமா."

"வீட்டுக்காரர் என்ன பண்றார்?"

"கும்பகோணத்திலஒருஃபார்மஸிவச்சிருக்கார், சிநேகிதாளோட சேர்ந்து. இந்த ஊர்லே எனக்கு மஞ்சக் காணி இருக்குன்னு ஜாகையை மட்டும் இங்கேயே வச்சுக்கலாம்னு சொல்லிட்டார்."

"குழந்தை, குட்டி?"

"பகவான் இன்னும் அருள் புரியலே... அஞ்சு வருஷமாச்சு கல்யாணமாகி."

"சீக்கிரமே பொறக்கட்டும்" என்றுமனம் நிறைந்து சொன்னேன்.

"ஒரு பாட்டுப் பாடேன்" என்றேன்.

வாய் திறந்தது. கணீரென்று குரல் பொங்கி வந்து அறையை நிறைத்தது.

வேறு எதுவும் பிரபஞ்சத்தில் இல்லே. யசோதாவின் குரல் இருந்தது. தாமரை மொக்கு தீபம் இருந்தது.

'காரளக பந்தியும் பந்தியின் அலங்கலும்
கரிய புருவச் சிலைகளும்...
கூரணிந்திருவிழியும் அமுதமொழியும்...
குமிழனைய நாசியும்...
வாரணிந்து இறுமாந்த வனமுலையும்
மேகலையும்
மணி நூபுரப் பாதமும் வந்து எனது முன்
நின்று
மந்தகாசமும் ஆக...

என் கண்கள் வெடுக்கென்று திகைத்தன. நிஜமா? நிஜமா?

அந்த அம்பர் ஜ்வாலையின் மத்தியில் 'அமுதீசர் ஒரு பாகம் அகலாத' அந்த 'சுக பாணி மந்தகாசப் புன்னகையும் ரட்சிக்கிற பார்வையுமாய் பிரசன்னமாகியிருந்தாள். நான் தவித்தேன். கண்ணில் ஆனந்த பாஷ்பம். கரகரவென்று கன்ன மேடுகளில் இறங்கியது.

என் தவிப்பைக் கண்டோ என்னவோ யசோதா குரலை இறக்கி நிறுத்தப் போனாள். 'நிறுத்தாதேடி நிறுத்தாதேடி... பாடு. பாடு.. பாடிண்டேயிரு' என்று அவளைத் திரும்பிப் பார்க்காமலேயே அவசரமாய் சொன்னேன். விம்மினேன்.

'வாசமலர் மரு அளக பாரமும் தண்
கிரண மதிமுகமும்...'

யசோதா நிறுத்தாமல் தொடர்ந்தாள்.

எழுந்தேன். வெண்கலவிளக்கின் முன்பு நெற்றி தரையில் முட்ட நமஸ்கரித்தேன்.

"அம்மா... அம்மா..." என்று புலம்பினேன். குரலை தப்பிப் போயிற்று.

* * * * *

"அன்னிக்கு பதறிப் போய் மூஞ்சிலே ஜலம் தெளிச்சு எழுப்பினப்போ என்ன சொன்னேன், ஞாபகமிருக்கா? 'யசோதா, நீ வான்னு கூப்ட்டவுடனே அம்பாள் வந்து இங்க இத்தனை நேரம் இந்த ஜோதில நின்னுண்டிருந்தாளே, நிறுத்தாமப் பாடுன்னு அதனாலேதான் சொன்னேன். நீ பாத்தியோ, நீ பாத்தியோன்னு எத்தனை தடவை கேட்டேன்?"

யசோதா புன்முறுவல் மாறாமல் பாயின் ஓரத்து நுனி நூலை கை விரலால் நெருடிக் கொண்டே கேட்டாள்.

"ஆமா. யசோ. ப்ரத்யட்சமா அன்னிக்குக் கண் முன்னாலே அம்பாள் வந்து நின்னா" எனக்குப் பழைய நினைப்பு நாமனை சுதறிற்று.

"வீட்டுக்கு வந்தவுடனே இவரண்டை சொன்னேன். 'அதெப்படி என் கண்ணுக்குத் தெரியாம அந்த மாமி கண்ணுக்கு மாத்திரம் அபிராமி தெரிஞ்சா'ன்னு கேட்டேன். 'அசடு'ன்னு சிரிச்சார் அவர். உனக்கு அபிராமி. எனக்குத் துர்க்கை. இன்னொருத்தனுக்கு காளி. அம்மா எங்கேயும் நெறைஞ்சிருக்கா.. உனக்குள்ளேயும், எனக்குள்ளேயும் இருக்கா. காமிராவைத் திருப்பி உன் மனசுக்குள்ள பாரு. உன் கண்ணுக்கும் தெரிவா. நீ கூப்ட்ட எடத்துக்கு வருவா. ஞானமும், தியானமும் இருந்தா கூப்ட்ட நேரத்துக்கு வருவா. நம்ப கண்ணை நம்மால பாக்க முடியலேன்னா, நம்மகிட்ட கண் இல்லேன்னா அர்த்தம்? சாமிக்கு உருவமும், வண்ணமும் நாம மனசுக்குள்ளே கொடுக்கறது தான். நம்ம மனசுதான் முக்கியம். நம்ப எண்ணந்தான் முக்கியம். அந்த மாமி மனசுல உருவாக்கி வச்சிருந்த அம்பாளை உன் பாட்டு அவ கண் முன்னால கொண்டு வந்து நிறுத்திடுத்து. நீயும் அந்தப் பாட்டை வெறும் பாட்டா நெனைக்காம ஒவ்வொரு



பிரார்த்தனை என்பது இதயத்தைத் திறக்கும் சாவி; மாலைப் பொழுதைத் தாளிடும் நாதாங்கி.
—மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி.

எழுத்தோட அர்த்தத்தையும் பூரணமா நம்பிண்டு லயிச்சுப் போயிருந்தா உனக்கும் அம்மா ப்ரத்யட்சம் ஆகியிருப்பா. மழை காலத்தில ஒரே இருட்டா இருக்கும். ஒரு க்ஷணத்துக்கு மின்னல் வந்துட்டுப் போகும். அந்த க்ஷணத்தில நாமஎதைப்பாக்கறோமோ அதுதான் மனசுல பதியும். ஞானமும் அப்படித்தான். பளீர்னு தெரியும். தெரியறச்சே கப்புன்னு பிடிச்சுடணும்'னார்." யசோதாவுக்கு லேசாய் மூச்சு இரைத்தது. பக்கத்தில் வைத்திருந்த செம்பு நீரை கொஞ்சம்போலக் குடித்தாள்.

"வாஸ்தவமான பேச்சு யசோதா... ஆனா"

"கொஞ்சம் என்னோட வரேளா?" என்று யசோதா எழுந்து கொண்டாள்.

நான் புரியாமல் எழுந்தேன். யசோதாவைத் தொட்டுக்கொண்டு அந்த உள்ளறைக்குப் போனேன்.

கதவைத் திறந்து "வாங்கோ" என்றாள். உள்ளே நுழைந்ததும் அந்த படம் பிரதானமாய்த் தெரிந்தது. விபூதியும், குங்குமமும் நெற்றியில் பூசி, காமிராவுக்குக் கண் கூசி, புன்னகைத்தபடி யசோதாவின் இளம் கணவன். சந்தன மாலை போட்டிருந்தது. பக்கத்தில் நாற்காலியில் ஒரு பட்டு வேஷ்டி, பனியன். ஒரு மெல்லிய சட்டை மாட்டப்பட்டிருந்தது. ஒரு ஸ்டூலில் டம்ளர் நிறைய தண்ணீரும், மூக்குக் கண்ணாடியும் வைக்கப்பட்டிருந்தன.

படத்திற்கு நேர் கீழே சின்னதாய் ஒரு வெள்ளிக் குத்து விளக்கு. ஒற்றைத் திரி. ஆரஞ்சு சுடர்.

"இந்த உள்ளதான் அவர் சமாதியானார். உடம்பை விடறதுக்கு முன்னால, 'நான் உன்னை விட்டுப்போகலையசோ... இங்கேயேதான் இருப்பேன். நான் உன்னைக் கூப்பிட்டுக்கற வரைக்கும் நீ சுமங்கலிதான். பூவையும், பொட்டையும் கலைச்சுடாதே'ன்னார். கண்ணை மூடினார். அந்த க்ஷணமே இந்த ஜோதி இன்னும் பிரகாசமா எரிய ஆரம்பிச்சது. தினம் அவருக்கு அன்னம் பரிமாறுகிற மாதிரி இதுக்கு எண்ணெய் விடறேன். இது எரிஞ்சுண்டிருக்கிற வரைக்கும் அவர் நான் எப்ப கூப்பிட்டாலும் அந்த ஜோதியில வந்து நிக்கறார். என்னோட பேசறார். என்னைத் தவிர இந்த ரூமுக்குள்ள வரதுக்கு யாருக்கும் உரிமை கிடையாது. உங்களை மட்டும் ஏன். அழைச்சுண்டு வந்தேன்னு எனக்கு ஞானம் தந்ததே நீங்கதானே. ஜோதியிலதான் எனக்கும் ஞானம்கெடைச்சிருக்கு" என்றாள் யசோதா.

யார் யாருக்கு குரு. என் சிஷ்யை அவளா? அவள் சிஷ்யை இல்லையோ நான்?

எனக்கு சகலமும் பொங்கிக் கொண்டு வந்தது.

அப்படியே பாய்ந்து அவளைக் கட்டிக் கொண்டேன். 'யசோ.. யசோ...' என்று முனகினேன். முலைக்காம்புகள் விறைத்துக் கொண்டன. நரம்புகள் முறுக்கேறின. உடம்புக்குள் ஒரு மின்னல் ஓடிற்று. அருளும்,

**அடுத்த வாரம்:**

# இன்னஸ் புத்தகம் உணர்த்தும் உலக சாதனைகள்!



**அதிசயத் தகவல்களுடன் சிறப்புக் கட்டுரை**

சக்தியும் அந்த ஸ்பரிசத்தில் என்னுள் பிரவாகித்தது. நான் உணர்ந்து பிரமித்தேன். புன்முறுவல் பூத்தாள் ஜனனீஸ்வரி. கடைக் கண்ணால் பார்த்தாள் லோகேஸ்வரி. சட்டென்று விலகினேன். "அம்பிகே" என்று யசோதாவின் கால்களில், அவள் பதறப் பதற விழுந்து நமஸ்கரித்தேன்.

விளக்குள் சுடர் சற்று நெளிந்து விட்டு மறுபடியும் நிமிர்ந்து, கூர்ப்பாய் நின்றது.

## 17

இரண்டு பெட்டிகளையும் ஒரு சாப்பாட்டுக் கூடையையும் பிளாட்பாரத்தில் இறக்கி வைத்த போர்ட்டர், "அம்மா இன்னும் தூங்கறாங்க, ஐயா! ஜல்தியா எழுப்புங்க... பலான ரயில் வர்ற நேரம். இதை யார்டுக்குத் தள்ளிடுவாங்க..." என்றான்.

"நீ பிளாட்பாரத்திலே இரு... நான் அம்மாவை அழைச்சுட்டு வரேன்," என்ற அரவிந்தன் மாயாவை எழுப்பினான். அவள் அயர்ந்து உறங்கிக் கொண்டிருக்கவே அவளை அப்படியே அலாக்காகத் தூக்கினான். மறுகணம் இடது கன்னத்தில் பளார் என்று விழ, காது பாடியது.

"ஏய், என்ன நெனைச்சுட்டிருக்கே... ஆர் யூ கிட்நாப்பிங் மீ?"

"மெட்ராஸ் வந்துட்டது, மாயா. எல்லாரும் இறங்கியாச்சு, பாரு..."

அவளை இருக்கையில் இருத்தினான். கன்னம் வலித்தது. மனம் வலிக்கவில்லை.

"இப்ப என்ன டயம்?"

"அஞ்சு இருபது..."

"என் தூக்கத்தைக் கெடுத்தே! இதுக்குத்தான் என்னைக் கல்யாணம் பண்ணின்டியா...?"

"வா, மாயா... மொதல்லே பிளாட்பாரத்திலே நிப்போம்... அப்புறம் டாக்ஸியிலே போலாம்... வீட்டுக்குப் போனதும் உன் ஆசை தீர நீ தூங்கலாம்..."

"ப்ராமிஸ்?"

"ப்ராமிஸ்..."

"மூஞ்சியை வாஷ் பண்ணிக்க வேண்டாம்?"

"வேண்டாம்..."

"மூஞ்சி டர்ட்டியா இருக்குமே... நீட்டா இருக்காதே..."

"பரவாயில்லே வா..."

"நீ முன்னாடி போ..."

அரவிந்தன் நடக்க மாயா பின் தொடர்ந்தாள். அவன் இறங்கியதும், அவளுக்கு உதவி செய்யும் எண்ணத்தில் கைகொடுக்க, அவள் லட்சியம் செய்யாமல் பிளாட்பாரத்தில் குதித்தாள்.

போர்ட்டர் அவளை ஒரு மாதிரியாகப் பார்க்கிறான் என்பதை கவனித்த அரவிந்தன், நிலைமையைச் சமாளிக்க, "குட்!" என்றான்.

# ஆகாச கங்கை

அதேசமயம் நிழுமராலஜி காரணமாக ஆராவமுதன் என்ற பெயரை ஆராமுதனாக்கிக் கொண்ட மானேஜரின் கணீரென்ற குரல் எழுந்தது.

"கங்க்ராஜுலேஷன்ஸ், அர்விந்த்! வாம்மா... நீ ரொம்பக் கொடுத்து வைச்சவ..."

"அதை இந்த பிளாட்பாரத்திலே தான் சொல்லணுமா சார்... அது சரி, உங்களுக்கு எப்படித் தெரியும் இன்னிக்கு இந்த ரயில்லே நாங்க வர்றோம்னு?" என்றான் அரவிந்தன், ஒரு கண்ணை மாயா மீது செலுத்தியவனாக. அவள் வருவோர் போவோரை வேடிக்கை பார்த்து நின்றாள்.

"பாஸ் நேத்து போன் பண்ணினார்... கார் கொண்டு வந்திருக்கேன்..."

"யார் கொண்டு வரச் சொன்னா?"

"இது என்ன கேள்வி அர்விந்த்? இந்தாப்பா போர்ட்டர், சாமான்களை எல்லாம் கார் ஸ்டாண்டுக்கு எடுத்துண்டு போ..." என்றார் ஆராமுதன்.



"சின்னக் குழந்தை...! என்ன அழகா சிரிக்கிறது...! நான் போய்க் கொஞ்சம் கொஞ்சிட்டு வரட்டுமா...? ரொம்ப க்யூட்டா இருக்கு."

அரவிந்தன் பார்த்தான்.

ஒரு இருபது அல்லது இருபத்திரண்டு வயதுப் பெண்ணின் இடுப்பில், இன்னும் இரண்டு வயது கூட ஆகாத ஒரு பெண் குழந்தை சிரித்து மகிழ்ந்து கொண்டிருந்தது. உப்பின கன்னங்கள்...நெற்றிப்பொட்டைக் காட்டிலும் கருமையான கண்கள். தலை எல்லாம் சுருட்டை சுருட்டையாக மோதிரக் குழல்களாக முடி. அவனுக்கே அந்தக் குழந்தையை வாரி அணைத்துக் கொள்ள வேண்டும் போல இருந்தது.

''வாட் எ ஒண்டர்ஃபுல் கிரியேஷன்!'' என்றாள் மாயா.

''எனக்கு அந்தக் குழந்தையோட அப்பாவைத் தெரியும்... ஒருநாள் உன்னே அவங்க வீட்டுக்கு அழைச்சுட்டுப் போறேன். அப்ப நீ உன் ஆசைதீரக் கொஞ்சலாம்!''

''ஷ்யூர்?''

''ஷ்யூர்.''

''ப்ராமிஸ்?''

''ப்ராமிஸ்...''

''ஓ. கே. நாம போகலாம்... அது சரி இந்த ஆள் யார்?''

''இவர்தாம்மா மெட்ராஸ் ஆபீஸ் மானேஜர்... ஆராமுதன்...''

''ஆமாம் அவர் நெத்தியிலே என்ன பெயின்ட்டிங்?'' சொல்லிவிட்டு மாயா சிரித்தாள்.

## பி.ஜி.ஆர்.





''டிமர் இட்லி; டிமர் உப்புமா, டிமர் புளியோதரை தின்றேன். டிமர் டிம ரென்று வயிற்றை வலிக்குது, டாக் டர்!''

முதன் முதலாக ஆராமுதனுக்கு விஷயம் புரிந்தது. தாரக்ராமின் மகள் எப்படிப் பட்டவள் என்று தெரிந்தது. அடுத்தடுத்து பற்பல எண்ணங்கள் தோன்றின. முதலாளி அரவிந்தனை அழைத்தது, டாஜ் ஒட்டலில் விருந்து வைத்தது, அரவிந்தன் பம்பாய் போனது, இப்போது ஒரு மனைவியுடன் வந்திருப்பது, எல்லாம் மனத்தைத் தாக்கின. ஆனால் எதையும் காட்டிக் கொள்ளாமல், தம் நெற்றியில் இருப்பது சாதாரண ஓவியம் அல்ல, அதன் பெயர் நாமம் என்று தெளிவு படுத்தாமல் முன்னே நடந்தார்.

* * * * *

பெசன்ட் நகர் வீட்டை அடைந்ததும் அரவிந்தன் முதலில் இறங்க, மாயா ''ஹைய், பீச் தெரியறதே!'' என்று சொல்லிக் கொண்டே குதித்தாள்.

டிரைவரும் ஆராமுதனுமாக சாமான்களைக் கொண்டு வர, மாயா, ''இதுதான் உன் ஹவுஸா?'' என்றாள்.

''இது நம்ப வீடு.''

''இனிமே இங்கேதான், நான் இருக்கணுமா?''

அவளுக்குப் பதில் சொல்லுவதற்குள், ''வாங்க... வாங்க... வா மிஸர்ஸ். மாயா அர்விந்த்!'' என்ற வரவேற்புக் குரல் கேட்டது.

அரவிந்தனிடம் ஏற்கெனவே வசுமதி சொல்லியிருந்தாள், அவள் வீட்டில் இருந்து தம்பதியை எதிர்கொண்டு அழைக்கப் போவதாக. அவளுடைய ஆத்ம தாகத்தை எண்ணி அரவிந்தனும் எதிர்ப்பு தெரிவிக்கவில்லை. வீட்டை நோக்கிச் செல்லும் போது வாசலில் செம்மண் கட்டிப் போட்ட கோலம் அவனுள் உற்சாகத்தை ஏற்படுத்தியிருந்தது. இப்போது அவள் வாயார அழைத்தபோது, அவனையும் மீறி அவள் பால் அன்பும் அபிமானமும் ஆயிரம்மடங்கு அதிகமாகியது. எத்தனை கோடிப் பெண்களில் ஒரு பெண் உண்மையான காதலுக்காக, தன் காதலனை இன்னொருத்திக்காகத் தியாகம் செய்து, அந்தத் தியாகத்தையும் எண்ணிப் பாராமல், காதல் தோல்வி விளைவிக்கக் கூடிய ரண களத்தையும் மறந்து முக மலர்ச்சியுடன் காதலனையும் அவனுடைய மனைவியையும் வரவேற்றிருக்கிறாள்?

''ஏய் அந்து!... ஜஸ்ட் எ மினிட்... யார் இவ... என்னை எப்படித் தெரியும்...? பேர் சொல்றா?''

''என் பேர் வசுமதி!'' என்றவசு ஹாலுக்கு வந்தாள்.

''எனக்கு நர்ஸா இருக்கப் போறியா?'' என்றாள் மாயா!

''ஓ ஆ ஆர் வெரி ப்ரைட்... எப்படிக் கண்டுபிடிச்சே?'' கூறும்போதே மாயாவின் முக அழகு வசுமதியைத் திக்குமுக்காடச் செய்தது.

''அந்து... இவ நல்லவளா? என்னை அடிக்க மாட்டாளே... கிள்ள மாட்டாளே... முன்னே ஒருத்தி நர்ஸா வந்தா... டாடியும் ராஜம்மாவும் இல்லாதப்ப என்னைக் கிள்ளுவா.... அடிப்பா...''

''நான் ரொம்ப நல்லவள், மாயா!'' என்றாள் வசு.

''அந்து, இவளை பிலிவ் பண்ணலாமா?..''

''நான் ரொம்ப டீஸன்ட் கேர்ள், மாயா! இரு, காப்பி கொண்டு வர்றேன்.''

''அந்து, நான் காப்பி சாப்பிட மாட்டேன்னு இவளுக்கு நீ சொல்லி வைக்கலியா?''

''ஓ, ஸாரி... உனக்கு ஸ்பெஷலா போர்ன்விட்டா தயார் பண்றேன்... அதுக்குள்ளே நீ பல் தேய்ச்சுடு, மாயா!'' கல்யாணத்துக்கு முன்பு பாபாலால் நகைக் கடைக்கு நெக்லஸும் மோதிரமும் வாங்கச் சென்ற போது, வசுமதி அரவிந்தனிடம் மாயாவைப் பற்றிய விவரங்களை எல்லாம் கேட்டு அறிந்து கொண்டிருந்தாள். சமயம் பார்த்து, இந்த போர்ன்விட்டா விஷயம் மறந்து போயிற்று.

மாயாவுக்குபாத்ரூம்இருக்கும்இடத்தைக் காட்டிவிட்டு ஹாலுக்கு அரவிந்தன் திரும்பிய போது, சோபாவில் ஆராமுதன் உட்கார்ந்திருந்தார்.

''காப்பி சாப்பிட்டுவிட்டுப் போகலாம் சார்!''

''நீயாகத் தரல்லேன்னுக் கூட, நானுகக் கேட்டுச் சாப்பிடலாம்னுதான் உட்கார்ந்திருக்கேன்... அப்புறம், இன்னொரு விஷயம்! இன்னிக்கு உங்க ரெண்டு பேருக்கும் நம்ம வீட்லேதான் சாப்பாடு. அக்காரவடிசல் பண்றா என் ஒய்ஃப்...''

''ஸாரி ஸார்... அவளாலே வர முடியாது...''

''வேண்டாம்... எல்லாத்தையும் இங்கே கொண்டு வந்துடறேன்.''

''வசு ஹெல்ப்புக்கு வந்திருக்கா. அவ என்ன திட்டம் போட்டிருக்கான்னு தெரியலே... அதோ வசுவே வர்றா. வசு, ஆராமுதன் சொல்றார், அவர் வீட்லேர்ந்து விருந்துச் சாப்பாடு வர்றதுன்னு... நீ என்ன சொல்றே?''

''நல்ல ஐடியா... நான் இன்னிக்குக் இச்சன்லே இருந்தா, மாயாவோட பேச முடி

பிறருக்கு நாம் செய்யும் சேவை இவ்வுலகில் வாழ நாம் கொடுக்கும் வாடகையே.
—வில்ஃப்ரெட் கிரென்ஃபெல்.

யாது... வரட்டும்.'' என்ற வசு, காப்பியை நீட்டினாள்.

''கரெக்டா டென் தர்ட்டி. ஓ.கே?''

''ஆபீஸ்?''

''ரெண்டு மணி நேரம் லேட்டாப் போய்க்கிறேன்... பாஸ் மூணு மணிக்கு போன் பண்றேன்னார். அவர்ட்டே எல்லாம் சொல்லணும்...''

அரவிந்தனுக்கு அவர் மீது சாட வேண்டும் போலத் தோன்றியது. ஆனால் என்ன புண்ணியம்? தாரக்ராம் பாம்பேயிலிருந்து இவரை ஆட்டி வைக்கிறார். ஆராமுதன் என்ன செய்வார்...?

''இன்னிக்கு நீங்க பாஸ்ட்டே பேசறப்போ, நான் மூணு மாசம் லீவ் போட்டிருக்கறதா சொல்லுங்கோ!''

''லீவா? மூணு மாசமா? நீ இல்லேன்னா ஆபீஸ் எப்படி ஓடும்?''

''நீங்க சொல்லுங்கோ, சார். பாஸ் பார்த்துப்பார்... இப்ப நான் அவரோட மாப்பிள்ளையாச்சே!'' என்றான் அரவிந்தன்.

* * * * *

இரவு வந்தது.

''அந்து, எனக்கு அவளைப் பிடிச்சிருக்கு!'' என்றாள் மாயா.

''வசுமதி நல்ல பெண். தினமும் உன்னைப் பார்க்க வருவா...''

''நான் மொதல்லே நர்ஸுனு நினைச்சேன்.. அவ லாயராமே?''

''ஆமாம், மாயா!''

''அப்ப உனக்கு எப்படி அவளைத் தெரியும்?''

''ஃப்ரெண்ட்ஸ்.''

''எப்படி ஒரு மேனும் ஒரு வுமனும் ஃபிரெண்ட்ஸாக இருக்க முடியும், அந்து?..''

''இருக்கோமே!''

''ஐ காண்ட் பிலிவ் இட்! அதுசரி! அவ எனக்காக வர்றாளா, இல்லே உனக்காகவா?''

''நம்ப ரெண்டு பேருக்காகவும்தான், மாயா...''

''எனக்கு என்னிக்காவது அவளைப் பிடிக்காமல் போனா, அவ வரப்படாது...''

''சரி, மாயா! உன் இஷ்டப்படியே செய்யறேன்... மணி பத்து அடிக்கப் போறது... தூங்க வேண்டாம்...?''

''ஹங்... இப்ப நினைவு வர்றது. சாயங்காலம் அந்த வசு பெட்ரூமை அலங்காரம் பண்ணிண்டிருந்தா... ஆமாம், ஏன் ஒரே பெரிய கட்டில்லே ரெண்டு படுக்கை, நாலு தலைகாணி, ரெண்டு பெட்ஷீட் எல்லாம் போட்டிருக்கு?''

நடந்து கொண்டே பேசிய மாயா, பெட்ரூமை அடைந்தாள்.

''நாம படுத்துத் தூங்கத்தான், மாயா!''

''தட் மீன்ஸ்... நீ என் பக்கத்திலே படுத்துப்பியா? ஏன் மல்லிப் பூவை இப்படிச் சரமாத் தொங்க விட்டிருக்கா... எதுக்கு படுக்கையெல்லாம் பூ சிதறியிருக்கு?''

எப்படி பதில் சொல்லுவது என்று தெரியாமல் தத்தளித்த அரவிந்தன் மாயாவின் முகத்தையே பார்த்தான். அவளிடம் சிரிப்பு இல்லை என்றாலும், அன்று காலையில் சென்ட்ரலில் பார்த்த குழந்தையின் நினைவு வந்தது.

''அந்து... நீ நல்லவன்தான்... என்னைக் கோவிச்சுக்கலே... ஒரு மாத்திரை கூடத் தரலே... ஆனா அதுக்காக நீயும் நானும் ஒரே கட்டில்லே படுத்துக்க வேண்டாம்.''

''நீ என் ஒய்ஃப். நான் உன் ஹஸ்பெண்ட்...''

திடீரென்று மாயா வீரிட்டாள்.

''நோ... நோ... யூ காண்ட் ஸ்லீப் ஹியர்.. யூ வில் ரேப் மி, யூ வில் ரேப் மி... யூ வில் ரேப் மி...!''

அரவிந்தன் அவளைச் சமாதானப்படுத்த முயலவில்லை. இரண்டு தலையணைகளையும், போர்வையையும் மட்டும் எடுத்துக்கொண்டு படுக்கை அறைக்கு வெளியே வந்து மௌனமாக நின்றான்.

''நீ எங்கே படுத்துப்பே!''

''ஹால்லே! நீ உன் பக்கமா தான் போட்டுக்க, மாயா!''

''மாட்டேன்... பயம்... நீ குட் ஃபெலோ... நன்றாகத் தூங்கு. குட் நைட்... ஹாப்பி ட்ரீம்ஸ்!'' என்றாள் மாயா.

''ஹாப்பி ட்ரீம்ஸ்!''

ஹாலில் போர்வையை விரித்துப் படுத்தபோது, அரவிந்தனுக்கு ஏமாற்றமோ அழுகையோ வரவில்லை. மாயா தானாக அவனை படுக்கை அறைக்கு அழைக்கும் வரை, அதனுள் பிரவேசிக்கக் கூடாது என்ற சங்கல்பம்தான் உறுதியாக ஏற்பட்டது.

(தொடரும்)

விஞ்ஞானி ஆல்பர்ட் ஐன்ஸ்டைனின் மூளையைப் பத்திரப்படுத்திச் சமீபத்தில் பகுதி பகுதியாகப் பிரித்தெடுத்து ஆறு மாத காலம் ஆராய்ச்சி செய்தார் மரியன் டையமண்ட். சாதாரணமாக ஒரு மனிதனின் மூளைப் பகுதியில் இருவித செல்கள் உண்டு. நினைவாற்றலையும் சிந்திக்கும் திறனையும் கவனிப்பது நியூரோன் செல்கள். அங்க அசைவுகள், உடல் செயல்பாடுகளைக் கவனிப்பது நியூரோக்ளியா செல்கள். ஒரு மனிதனின் மூளையில் தென்படும் அளவை விட 73 சதவீதம் அதிக நியூரோன் செல்கள் ஐன்ஸ்டீனின் மூளையில் காணப்பட்டதாகத் தன்னுடைய ஆராய்ச்சியில் தெரிவித்திருக்கிறார் மரியன்.

—'நியூஸ்டைம்' இதழிலிருந்து.
அ.குமார்.



## அண்ணாவின் இதயம்

"எதிர்க்கரையில் கிழிந்த ஆடையோடு உடல் மறைத்துச் செல்லும் பெண்ணைக் கண்டு உள்ளம் உருகித் தன் சால்வையை உருவி ஆற்று நீரில் காந்திஜி மிதக்கவிடும் காட்சி என் உள்ளத்தை நெருடிற்று. படம்—காந்தி.

திருமதி ராஜம் பார்த்தசாரதி, நியூடெல்லி.

## குழந்தைக்குத்தான் ஒன்று

அப்பர் பல பாட்டுக்கள் பாடுகிறார். ஆலயக் கதவு திறக்கிறது. திருஞானசம்பந்தர் ஒரு பாட்டுப் பாடுகிறார். கதவு மூடிக் கொள்கிறது. தம் புலமைக்கு இது இழுக்கென்று கருதும் அப்பரை 'நான் குழந்தை. என் ஒரு பாடல் போதும். தங்கள் இசைப் புலமையில் இறைவன் மெய்ம்மறந்ததால் காலதாமதம்' என்று திருஞானசம்பந்தர் தேற்றுகிறார். என் உள்ளத்தில் பதிந்த காட்சி இது. படம் — திருவருட்செல்வர்.

—எஸ். மரகதம், காட்டூர்—பூவாளூர்.

## பெற்றோர் காரணம்

"34 வயதாகியும் எனக்குத் திருமணமாகாத காரணம் என் பெற்றோர்கள்தான். நான் எப்போது ஊருக்குப் போனாலும் 'நம்ப ரகு அன்னிக்குப் பார்த்தாப்பலேயே கொழந்தையாட்டமா இருக்கான்' என்று அம்மா சொல்வாள். நான் எப்படிக் கல்யாணம் பண்ணிப்பேன்?" என்கிறான், 'ஐயோ.. அம்மா... அம்மம்மா' டி.வி. நாடகத்தில் வரும் ரகு. இது நான் ரசித்த காட்சி.

—திருமதி கிருஷ்ணா, சென்னை—17.

## கரைத்துக் குடித்த காதல்!

மரோச்சரித்ராவில் கமலின் போட்டோவைப் பெற்றோர் எரித்ததும் தன் காதல் உறுதியைக் காட்ட, சரிதா அந்த எரிந்த போட்டோவைக் காப்பியில் கலந்து குடிப்பது நான் ரசித்த காட்சி.

—தெய்வமணி, நியூடெல்லி—58.



## இரவில் எரிந்த இலங்கை

வாலில் எரியூட்டப் பெற்ற அனுமன் இலங்கைக்கு எரியூட்டும் லங்கா தகனக் காட்சி மனோகராவின் கும்பகர்ணன் நாடகத்தில் தத்ரூபமாக அமைந்திருந்தது. இது நான் மிகவும் ரசித்த காட்சி.

—வ. நா. சுப்பிரமணியன், பம்பாய்—86.

## தொட்டால் வரும் பெருமை!

தொழுநோய் வந்திருக்கிறது சுப்பிரமணிய சிவாவுக்கு. சிறையிலிருந்து விடுதலை ஆகி வருகிறார். உணர்ச்சி வேகத்துடன் எதிர்கொண்டு ஆரத் தழுவ வருகிறார் வ.உ.சி. 'உம்மையும் தொழுநோய் பற்றும்' என்று சிவா எச்சரிப்பதைப் பொருட்படுத்தாது, 'உம்மைத் தொட்டுத் தொழுநோய் வந்தால் அது எனக்குப் பெருமை' என்று தழுவிக் கொள்கிறார் வ.உ.சி. 'கப்பலோட்டிய தமிழனில்' என் நெஞ்சில் பதிந்த காட்சி இது.

—எஸ். மங்கையர்க்கரசி, மதுரை—1.

## ஓசை இல்லாத ஆசை

"மூக்கைப்பாரு மூக்கை முந்திரிப்பழமாட்டம் அப்படியே கடிச்சுத் திங்கணும் போல இருக்கு'' என்று வாய் விட்டுச் சொல்லும் சரிதா தான் சொன்னது எல்லோருக்கும் கேட்கும் வண்ணம் தறிகளின் ஓசை நின்றதை உணர்ந்து அசடு வழிகிறாள். பின் தனிமையில் அதைப் படிப்படியாக, அழுகை



# காட்சி

## வாசகர் பங்கு

யாக மாற்றும் 'அச்சமில்லை அச்சமில்லை' படத்தின் காட்சியில் நான் மெய்ம்மறந்தேன்.

—திருமதி கோமதி சோமசுந்தரம், திருச்சி—5.



**தலைமுறை தொடர்கிறது**

சுவரின் மீது உட்கார்ந்து அரட்டை அடிக்கும் இளைஞர் குழு பிரிந்து சென்று விடுகிறது. 'பாலைவனச் சோலை' படத்தை முடிக்கும் போது காலியாய் விட்ட சுவரின் மீது வேறு சில சிறுவர்கள் வந்து அமர்வதைக் காட்டி, தலைமுறை தொடர்கிற முத்தாய்ப்புடன் படத்தை முடித்த காட்சி என்னைக் கவர்ந்தது.

—திருமதி சுலோசனா ராமகிருஷ்ணன், பம்பாய்—19.









ராமதாஸின் தூதுவர்கள்

35 வருடங்களுக்குமுன் ஞானாப்ராஜ மாணிக்கம் நடித்த பக்த ராமதாஸில், ராம லக்ஷ்மணர்கள் ஜவான்கள் உருவில் நவாபின் முன் வருகின்றனர். 'யார் நீங்கள்?' என்ற கேள்விக்கு 'ராமதாஸின் தூதுவர்கள்' என்று பதில் வருகிறது. நவாபிற்கு அவர்கள் சுயரூபம் புலப்பட அவர்களைப் பிடிக்கச் செல்கிறார். பிடியில் அகப்படாது அவர்கள் மறுபக்கம் செல்லும்போது நவாபின் உணர்ச்சிமயமான நடிப்பு இன்றும் பசுமையாக என் நெஞ்சில் நிலைத்திருக்கிறது.

—கே. ஜெயலக்ஷ்மி, கும்பகோணம்—1.

வசந்தம் வந்தபோது

படம் 'Beautiful People' பாலைவனத்துக் கோடையின் கொடுமை தாளாத மிருகங்களும் பறவைகளும் தவித்துத் துடிக்கின்றன. முடிவில் மழை வர அப்போதும் நம்பிக்கை வராமல், சற்றுக் கழித்து வசந்தம் நிச்சயம் என்ற நிலையில் அவை போடும் ஆனந்தக் கூச்சலும் ஆடும் ஆட்டமும் என்னைச் சிலிர்க்க வைத்தன.

—ஆர். லலிதா, செகந்திராபாத்—15.

யாருக்கோ காட்டிய கை

வேகமாகப் போகும் பேருந்து வயல் வரப்பில் ஓடிவரும் இருவர் கையாட்டக் கண்டுநிற்கிறது. கண்டக்டர்விசில்கொடுக்க டிரைவர் வண்டியை நிறுத்துகிறார். வயல் வரப்பைத் தாண்டி பஸ்ஸை நோக்கி அவர்கள் ஓடிவர பயணிகள் காத்திருக்கிறார்கள். வந்தவர்கள் பஸ்ஸைக் கடந்து அடுத்த வயல் வரப்புக்கு ஓட, டிரைவரைப் பயணிகள் பார்க்க, கண்டக்டரை டிரைவர் முறைக்க மெட்ராஸ் டு பாண்டிச்சேரி படத்தில் இந்தக் காட்சி திரையரங்கத்தில் குபீரென்ற சிரிப்பைக் கிளப்பிற்று.

—முத்து தங்க ஐயப்பன், மதுரை—1.

புரியாத மாதிரி பேசினால்...

''களம் கண்டு படை பல வென்று கடை பல திறந்து மாலையுடன் வருகிறேன், அண்ணி'' அரசியல்வாதி சோ விடை கேட்கிறார். அண்ணன் சோ ஏதாவது புரிந்ததா என்று மனோரமாவைக் கேட்க, அவர் 'இல்லை' என்கிறார். 'புரியாத மாதிரி பேசக் கத்துக் கிட்டான். சீக்கிரம் பெரிய மனுஷன் ஆயிடுவான்' என்று சோ பதிலளிக்கும் போது நான் என்னை மறந்து ரசித்தேன், 'தங்கப் பதக்கம்' படத்தில்!

—எஸ். ராஜலட்சுமி, சென்னை—63.

நிழலும் நடிப்பும்

பத்தியான வேளையில் குளித்து முழுகிய கூந்தலை வாசற்படியில் விரித்துப் போட்டு டிரான்ஸிஸ்டர் கேட்கும் லட்சுமி வீட்டில் நிழல் விழக் கண்டு பயந்து புடவைத் தலைப்பைச் சரி செய்து மிரண்டு எழுந்திருக்கும் காட்சி அதன் தத்ரூபச் சுவையால் என்னைக் கவர்ந்தது: படம்: சிறை.

—ஆர். சீதாலட்சுமி, சென்னை—93.

அன்னை என்பவர் அவர்தான்

பிள்ளை காய்ச்சலில் களைத்துத் தன்னை மறந்து உறங்குகிறான். அவன் எழுந்துவிடக் கூடாதே என்று கடிகார ஒலி கேளாமல் இருக்க அதை நிறுத்தி, வாகன ஓசையை நிறுத்த ஜன்னல்களை மூடி உள்ளே வரும் அவன் காதலியை விரட்டிப் பாசப் பிழம்பாக ஜ்வலிக்கும் தாயைப் பிரதிபலிக்கிறார் பானுமதி. ''அன்னை'' படத்தின் இந்தக் காட்சி இன்னும் பல ஆண்டுகள் என் நினைவில் நிற்கும்.

—கமலா தியாகராசன், சென்னை—28.

அழியக் கூடாத குங்குமம்

சலங்கை ஒலி படத்தில் இடி மழையில், குடித்துவிட்டு, கமல் கிணற்று மேடையில் ஆடிப் பாடத் தன்னை அமங்கலியாக கமல் பார்க்கக் கூடாது என ஜெய்ப்ரதா குங்குமம் வைத்து வருகிறார். அந்த மழையில் குங்குமம் அழியக் கூடாது என்று தன் கையால் கமல் அவள் நெற்றியை மறைப்பது நான் மிகவும் ரசித்த காட்சி.

—திருமதி எஸ். பவானி, பந்தாரா,
நாக்பூர்—6.

கண்ணோடு கண்

தில்லானாமோகனாம்பாள் படத்தில் 'நலம் தானா' என்று அபிநயத்தால் கேட்கிறாள் மோகனாம்பாள். ஷண்முகமும் உணர்ச்சி வசப்பட்டுக் களிப்புடன் கண்களை மூடித் திறந்து சிறு தலையசைப்புடன் விடையளிக்கிறான். சிவாஜியும் பத்மினியும் இதில் உணர்ச்சியைக் கொட்டி நடித்தது என்னால் மறக்க முடியாத காட்சி.

திருமதி சீதாலட்சுமி, புதுக்கோட்டை—1.

ராகமாலிகா வழங்கும் பட்டுப்புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:

எஸ். ராஜலக்ஷ்மி,
3, ராமலிங்க அடிகள் தெரு,
சீனிவாச நகர்,
சென்னை—63.

## வாசகர் பங்கு

# ஒரு வருஷப் பிறப்பு வெகுமதி ஸன்ரைஸிடமிருந்து!

# ரூ.3/- தள்ளுபடி

## ஒவ்வொரு ஸன்ரைஸ் 200 கிரா. ரீஃபில் பேக்கின் மீதும்!




உங்களுடைய வருஷப் பிறப்பை ஸன்ரைஸின் விசேஷ சலுகையுடன் துவக்குங்கள்!

உங்களுக்கு பிடித்தமான ஸன்ரைஸ் காப்பியின் ஒவ்வொரு 200 கிரா. ரீஃபில் பேக்கிலும் ரூ. 3/- மிச்சப்படுத்துங்கள்.

ஸன்ரைஸ், அந்த முதல் காப்பியின் புதுமலர்ச்சியளிக்கும் நறுமணத்தை ஒரு நாளில் எந்நேரத்திலும் மீட்டுப் பெற சிறந்ததொரு வழி!

முந்துங்கள்!
சலுகை சரக்கு
தீரும்வரை

**Nestlé**

# ஸன்ரைஸ்

**இன்ஸ்டன்ட் காப்பி-சிகரி ப்ளெண்ட்**

**அம்மாவின் அந்த முதல் காப்பியின் புத்துணர்ச்சியூட்டும் நறுமணத்துடன்.**

FSL-8063 TAM

## 29

## திருப்பதிப் பணம் எங்களுக்கு வேண்டும்

ராபர்ட் கிளைவ் ஆர்க்காட்டுக் கோட்டை மீது ஏறிப் பரிகங்களையும் உப்பரிகைகளையும் பார்த்து வந்தார்.

இரண்டாம் பரிகத்தைப் பார்த்ததும் திகைப்பு ஏற்பட்டது.

கற்கள் சிதறிப் பலவீனமாக இருந்தது. ஒரு குண்டுக்குத் தாங்காது. எதிரிகளிடம் பீரங்கி தற்சமயம் இல்லை எனினும் அதே நிலை நீடிக்கும் என்று நம்ப முடியாது.

அருகில் இருந்த இந்தியச் சிப்பாய்களை அழைத்தார். இருக்கும் கற்களை உபயோகித்து மண்ணைக் குழைத்துப் பூசச் சொன்னார். அவர்கள் உடனே விரைந்தார்கள். எல்லோருக்கும் பங்கிடல் முறையில் தான் உணவு கிடைத்து வந்தது. சோர்ந்து இருந்தாலும் உற்சாகமாக இருப்பதைப் பார்த்து மகிழ்ச்சி அடைந்தார்.

மற்றொரு இடத்தில் நாமம் போட்ட சிப்பாய் மேற்கே நோக்கி உட்கார்ந்து பிரார்த்தனை பண்ணிக் கொண்டிருந்தான்.

கிளைவ் வருவதைக் கண்டு மற்றவர்கள் அவனை எழுப்ப முயன்றார்கள். கிளைவ் வேண்டாம் என்று சமிக்ஞை செய்தான்.

சிறிதுநேரம் அவன் பக்கத்தில் நிற்க, நாமதாரிச் சிப்பாய் தனது ஜபம் முடிந்து திரும்பிப் பார்த்து, கிளைவ் நிற்பதைப் பார்த்து, திடுக்கிட்டு எழுந்து விறைப்பாக ஸல்யூட் அடித்தான்.

''உன் பேரென்ன?'' என்றான் கிளைவ்.

''ஏழுமலை!'' என்றான் சிப்பாய்!

''இப்போது எந்தக் கடவுளுக்குப் பிரார்த்தனை செய்தாய்?'' என்றான் கிளைவ்.

''வெங்கடாசலபதி!

''திருப்பதிப் பெருமாளா?''

''ஆமாம்!''

''என்ன வேண்டிக் கொண்டாய்?''

''எல்லாம் சரியாக முடிஞ்சு, வீட்டுக்கு நான் க்ஷேமமாய்த் திரும்ப வேண்டுமின்னு...''

''ஓகோ, அப்படியா! இங்கே யுத்தம் சரியாக முடியவேண்டுமானால் வெங்கடாசலபதி உதவி வேணும் தெரியுமா?''

ஏழுமலை என்பவர் நாற்பது வயது ஹவில்தார்! கிளைவ்சொன்னதைக்கேட்டதும் அவர் கண்கள் கலங்கி விட்டன.

''பிரபு! தாங்களா இப்படிச் சொல்கிறீர்கள்?'' என்றான் தாழ்ந்த குரலில்.

''நான்தான் சொல்கிறேன். இதில் என்ன அதிசயம்?'' என்றான் கிளைவ்.

''இல்லை, நீங்கள் வேறு சம்பிரதாயங்களை ஏத்துக்கிட்டவர்கள் ஆச்சே!''

''அதனால் என்ன? உங்க கடவுள்கிட்டே பணம் இருக்கு!

சிரித்துக்கொண்டே சொன்னான் கிளைவ்.

ஹவில்தார் ஏழுமலை நம்பவில்லை. புன்னகையாக மீசையெல்லாம் தெரியச் சிரித்தார்.

''இல்லை ஹவில்தார்! நிஜமாகத்தான் சொல்கிறேன். 'திருப்பதிப் பணத்தைத்தான் நான் எதிர்நோக்கி இருக்கிறேன். அவர் பணம் கிடைத்தால் போதும். இந்தச் சண்டையில் ஜெயித்து விடுவோம். நீங்கள் இடைவிடாது பிரார்த்தியுங்கள்!''

கிளைவ் சொல்லிவிட்டு மேலே தொடர்ந்தான்.

ஏழுமலை தன் காதுகளை நம்பாமல், அந்த வெள்ளையன் போகும் திசையையே பார்த்துக் கொண்டிருந்தான்.

* * * * *

இலங்கைக்குத் தென் கிழக்கிலுள்ள மாயமான் காட்டில் சாதாரணமாக யாரும் உட்புக முடியாது.

அவ்வளவு அடர்ந்திருக்கும். அதன்றி அதில் பள்ளத்தாக்குகளும், குன்றுகளும், ஆளையைக் குழப்பி விடும். திசை தெரியாமல் திருப்பி விடும்.

என்னே அந்தக் காட்டை அரணாக வைத்துக் கொண்டு சுதந்திர ராஜ்யம் செய்து கொண்டிருந்த ஆறு ஏழு மறஇன மக்களுக்கு மட்டுமே அந்தக் காட்டின் அத்தனை வழிகளும் அத்துப்படி.

காடுகள் தெற்கு, கிழக்கு, மேற்கு திசை






களில் பரவி, தென் சீமைகளை அநேகமாக கத்தரித்து விட்டது போல் ஒரு எல்லையைக் கொடுத்தன.

இவைகளின் வியாபிப்பு காரணமாக இவைகளை ஊடுருவித் தெற்கே செல்வது கடினமான காரியம்.

நவாபுகள், வெள்ளைக்காரர்கள் யாருமே இதற்கு விதி விலக்கு அன்று.

சிற்சில இனங்களை எதிர்த்துச் சண்டையிட்டு சில போர்களில் ஜெயித்திருக்கிறார்களே தவிர, அவர்களை யாருமே முழுவதுமாக அடக்கி ஆண்டதில்லை.

எனவே இந்த மறவ இனங்களும், இவர்களது உதாரணத்தால் தென் சீமை மக்களும் சற்று சுதந்திர மனப்பான்மை உடையவர்களாகவே அந்த நாட்களில் இருந்து வந்தார்கள்.

இந்தமாயமான் காட்டில்நுழைந்தபோது, வர்மனையும் சிந்துவையும் உள்ளே வழிகாட்டிச் செல்ல ஆட்கள் வந்திருந்தார்கள்.

போகப் போகக் காட்டில் நிறைய வீரர்கள் கூட்டம் சேர்ந்திருப்பதை வர்மன் உணர்ந்து கொண்டான்.

காடுகளுடே ஒரு காதம் நடந்து சற்று விஸ்தாரச் சமவெளியை அடைய, ஒரு பெரிய ஆலவிருட்சம் அந்த இடம் முழுவதிலும் கரிய நிழலை ஆழ்த்தியிருந்தது.

வர்மன் அந்த நிழல் வெளிக்குள் செல்ல, ஏற்கெனவே அங்கே பெரிய கூட்டம் ஒன்று கூடியிருந்தது.

கல்மேடையில் பல பாளையக்காரர்கள் அமர்ந்திருந்தார்கள்.

அவர்களில் பல பேரை வர்மன் ஏற்கெனவே பொம்மராஜு பாளையத்தில் பார்த்து விட்டான்.

பலர் புதிதாய் இருந்தார்கள்.

எல்லோரும் விபூதியும் சந்தனமும் பூசியிருந்தார்கள். முகங்களில் வீரம் மின்னியது. கொழுத்த கைகளும், கால்களுமாக, ஒரு இயல்பைத் தாண்டிய தேக ஆகிருதியுடன் தென்பட்டார்கள்.

''இதோ பாருங்கள்!'' என்றான் சிந்து.

அவன் சென்ற ஓரத்திலிருந்து ஒரு சரிவும் கீழே சிறு பள்ளத்தாக்கும் தெரிந்தது.

பள்ளத்தாக்கு எங்கும் சிறுசிறு புகை எழுந்து கொண்டிருந்தது.

வர்மன் ஆச்சரியத்துடன் பார்க்க, அங்கும் காட்டு மரங்களின் அடியில் ஏராளமான வீரர்கள் வார்த்தையாடி அமர்ந்திருப்பதைக் கண்டான்.

அவர்கள் செய்யும் சமையல் புகையே, அப்படி மேலே சுருள்களாக வந்து கொண்டிருந்தது.

''இதென்ன?'' என்றான் வர்மன் ஆச்சரியத்துடன்.

''தம்பி!'' என்று ஒரு பழகிய குரல் அவனை அழைத்தது. திரும்பிப் பார்த்தான். ஏற்கனவே பார்த்த பெரியவர்தான்.

''பார்த்தாயா, உடன்படிக்கைக் குழு என்ன செய்திருக்கிறது என்பதை?''

வர்மனை அழைத்து, கல்மேடை மீது உட்கார்த்தினார்.

பலரும் வர்மனைப் பார்த்தார்கள்.

''பெரியவரே!'' என்றான் வர்மன். ''இதெல்லாம் என்ன?'' என்று வீரர் கூட்டத்தைக் காட்டிக் கேட்டான்.

''தம்பி! அத்தனை பாளையக்காரர்களும் திரட்டி இந்தச் சேனையை அனுப்பி இருக்கிறார்கள்.''

''எதற்கு?''

''போரிடுவதற்குத்தான்!''

''யாரோடு இடப் போகிறார்கள்?''

பெரியவர் புன்னகை சூதப்பினார்.

''அதுதான் பிரச்னை! யாரோடு செய்தால் எங்கள் நாயக்க வமிசமும், பாளையக்கார வமிசமும் பழையபடி சீராகும் என்று யோசிக்கிறோம்.''

வர்மனுக்குப் புன்னகை வந்தது.

''வேடிக்கையாக இருக்கிறது பெரியவரே!''

''கேட்கப் போனால் அப்படித்தான் தோன்றும். எங்களுக்குள் பெரிய விவாதமே இது தான். சிலர் இங்கிலீஷ்காரனை விரட்டு என்கிறார்கள். சிலர் பிரெஞ்சுக்காரனை துரத்து என்கிறார்கள். சிலர் சந்தாசாகிப்பையும், சிலர் முகம்மதலியையும் சொல்கிறார்கள். சிலர் எல்லோரையுமே விரட்டு என்கிறார்கள்''.

வர்மனுக்கு இன்னும் புன்னகை வந்தது.

''யாரை விரட்டுவது என்று இன்னும் தீர்மானமாகவில்லையா?''

''ஒருவிதமாய் ஒரு தீர்மானம் கொண்டு வந்திருக்கிறோம்,'' என்றார் பெரியவர்.

''என்ன சொல்லுங்கள்?''

''எல்லோரையும் விரட்டவோ, அல்லது வெறும் வெள்ளையர்களை மட்டும் விரட்டவோ எங்களுக்கு, ஆள்பலம், பணபலம் போதாது. எனவே யாருடனாவது கட்சி சேர்ந்து நமக்கு வேண்டாதவரை முதலில் ஒழித்துக் கட்ட வேண்டும்.''

''சரி, முதலில் ஒழித்துக்கட்டப்பட வேண்டியவர் யார்?''

''ஒன்று இங்கிலீஷ்காரன் அல்லது பிரெஞ்சுக்காரன்.''

''இதில் தீர்மானமாகவில்லையா?''

''இல்லை! இன்னமும் யோசித்துக்கொண்டிருக்கிறார்கள்.''

''ஓகோ! இதிலும் விவாதம் தான் போலும்!''

''ஆமாம்! இதில் முடிவு எடுத்துக் கொடுக்க உதவியாகத்தான் வேன்ஸான் துரையை அழைத்திருக்கிறோம்.''

''ஓகோ? அவர் எந்த விதத்தில் உங்களுக்கு உதவுவார்?''

''வேன்ஸானுக்கு எங்கள் உடன்படிக்கைக் குழுமேல் ஒரு பற்று உண்டு.''

''ஆச்சரியமாயிருக்கிறதே! அவருக்கு எப்படி பற்று வரும்?''

''அவர் நாலும் படித்தவர். நாலு நாடு போனவர்! அனுபவசாலி! எனவே அவர் சொல்வதைக் கேட்கலாம் என்று இருக்கிறோம்.''

''உங்களுக்கு யோசனை சொல்வதாகச் சொன்னாரா?''

''ஆமாம்! எங்கள் மீது அவருக்கு ஏனோ விசுவாசம்! எங்கள் நோக்கத்தை அவர் உன்னதமானது என்கிறார்.''

''சரி! அவரிடம் ஆலோசனை கேட்கப் போகிறீர்கள்?''

''ஆமாம்.''

சிந்து இப்போது இடைமறித்தாள். ''வீரரே! இப்போது இங்கே தங்களை அழைத்து வந்திருக்கிறோனே! அதற்கும் காரணம் இருக்கிறது!''

''என்ன சொல்லுங்கள்!'' என்றான் வர்மன்.

''எங்களுக்குப் பணபலம் வேண்டுமல்லவா!''

''ஆமாம்!''

''திருப்பதி பணம் எங்களுக்கு வேண்டும்.''

''ஓ! உங்களுக்குத்தான் பொம்மராஜ பாளையத்து ஜமீன்தார் உடன்பாடு ஆயிற்றே! அவரிடமிருந்து பெற்றுக் கொள்ள வேண்டியதுதானே!''

''அவர் சில நிர்ப்பந்தங்களில் இருக்கிறார். அவரிடமிருந்து பணத்தைப்பெற இங்கிலீஷ்காரர் தங்கள் சிறுகோஷ்டியை அனுப்பியிருக்கிறார்கள். பிரெஞ்சுக்காரர்களும் அப்படியே. சண்டை போடும் இரண்டு நவாபுகளும் அப்படியே! இவர்களிடம் அகப்பட்டுத் திண்டாடுகிறார் ஜமீன்தார்.''

''உங்களுக்கு ரகசியமாகக் கொடுத்து விடுவதுதானே!''

''அதிலும் சிக்கல் இருக்கிறது. நாளை அவரது ஜமீனே பறிபோனாலும் போகும்.''

''சரி, இந்தச் சிக்கல் தீர என்ன வழி?''

''ஜமீன்தார் திருப்பதிப் பணத்தை யாருக்கு வேண்டுமானாலும் அனுப்பட்டும். ஆனால் அதை இடைமறித்து நாம் அபகரித்து விட வேண்டும். அப்போது நமக்குக் காரியமும் வெற்றியாகும். ஜமீன்தார் மீது பழியும் போகாது.''

''சரி! அதைச் செய்யுங்களேன்.''

''அதற்காகத்தான் உன்னை அழைத்திருக்கிறோம் இங்கே!''

''நானா? நான் இதில் என்ன செய்வேன்?''

''நீயும் உடன்படிக்கைக் குழுவில் கையொப்பம் போட்டிருக்கிறாயே!''

''ஆமாம்!'' என்று சொல்லி சிந்துவைப் பார்த்தான் அவன். சிந்து முறுவல் செய்தாள்.



## அறிமுகப்படுத்துகிறோம்!

# புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர்

## அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரணமளிப்பது மட்டுமல்ல, உண்மையிலேயே அதைத் தடுத்திட உதவுகிறது.

**நீங்கள் வேர்க்குருவைத் தடுக்க முடியும்போது அது தாக்கும்வரை ஏன் காத்திருக்க வேண்டும்?**

இப்போது, உங்கள் வேர்க்குரு பிரச்சினையைக் கட்டுப்படுத்த இன்னும் மிகத் தீவிரமான வழி—புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரண மளிப்பது மட்டுமல்ல உண்மையிலேயே அதைத் தடுத்திட உதவுகிறது.

**புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஏன் மிகவும் தீவிரமானது!**

உங்களுக்கு அதிகமாக வியர்த்து, அந்த வியர்வை உங்கள் சருமத்தில் அதிக நேரம் தங்கியிருக்கும்போது, வேர்க்குருவின் தாக்குதலுக்கு நீங்கள் ஆளாகிறீர்கள். அதனால்தான் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் மிகவும் தீவிரமானதாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சும் வண்ணம் விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது அது— உங்கள் சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுக்கிறது— ஆகவே வேர்க்குரு இல்லை. எரிச்சல் இல்லை. கசகசப்பு இல்லை. அப்பாடா என்ன நிவாரணம்! அதற்கும்மேல் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர், இப்போது மகிழ்ச்சிதரும் புதிய நறுமணமும்* கொண்டுள்ளது.

வரும் கோடையில் வேர்க்குரு தாக்கும் வரை காத்திருக்காதீர்கள். விரைந்து வாங்கிடுங்கள் ஒரு பேக் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். வேர்க்குருவை நீங்கள் தடுக்க முடியும்போது, வேர்க்குருவால் ஏன் சிரமப்பட வேண்டும்?

விசேடமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. இவ்வம்சங்கள் சொல்லுகின்றன.



வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சுகிறது.



சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுப்பதற்கான விசேஷ மருந்துக் கலவை கொண்டது.



சருமத்தை குளிர்ச்சியாகவும் புத்தம் புதுமையாகவும் வைத்துக் கொள்கிறது, அதன் இதமான செயல்.




*சந்தன மணத்திலும் கிடைக்கிறது.

Johnson & Johnson

OBM-4181 TAM

# தாவண்கெரே

## ஃபாஷன் துணிரகங்கள்



மென்மையாக நெசவு செய்யப் பட்டது பிரியா* டெரீன் சேலைகள்— கவர்ச்சிகரமான டிசைன்களில்— வசீகர வண்ணங்களில்.

அழகுடன் தழுவிடும் அருமையான சேலைகள்.

**தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிட்.**
ஹனுமந்தப்பா கட்டிடம்,
சித்ரதுர்கா ரோடு,
தாவண்கெரே-577 002.

ஷோ ரூம்கள்:
காவேரி பவன், பெங்களூர்-560 009.
தாஜிபன்பேட், ஹுப்ளி-580 020.
சித்ரதுர்கா ரோடு, தாவண்கெரே-577 002.

THOMAS/8403-B/TAM



## அருள் வாக்கு

எப்போது பார்த்தாலும் குடிக்கணும், ஊதணும் என்று இருப்பது போல வெற்றிலை போட்டுக் கொள்வதும் ஒரு 'ஹாபிட்' ஆகி, அதற்கு அநேகம் பேர் 'அடிக்ட்' ஆகிறார்கள். இதனால் நாக்கு தடித்து, பசி மந்தித்துப் போய் விடுகிறது. இப்படி விடக் கூடாது. பார்க்கவே பிடிக்காமல், வாய் நிறைய வெற்றிலைச் சாற்றை வைத்துக் கொண்டு, பேசுவது, நம்மேலே அது தெறிப்பது, தங்கள் மேலேயே ஒழுகுவது என்றெல்லாம் பண்ணுவது கௌரவமும் இல்லை ஆசாரமும் இல்லை. பொடியும் இப்படித்தான். போகிற இடமெல்லாம் (வெற்றிலை) துப்புவதும் (பொடி) சிந்துவதும் ஸிவிக் ஸென்ஸுக்கே விரோதம்.

கிருஹஸ்தர்கள், முக்கியமாக ஸுமங்கலிகள் வெற்றிலை போட்டுக் கொள்வதில் தப்பேயில்லை. தாம்பூலம் கொடுத்து உபசரிப்பதே மங்களம் என்று இருக்கிறது. பூஜையிலும் தாம்பூலம் அர்ப்பணம் பண்ண வேண்டும். அது ஸௌபாக்கிய சின்னம். அதோடு ஜீர்ணகாரி, ரத்தசுத்தி, சுண்ணாம்பில் கால்ஷிய சத்து இருக்கிறது. இத்தனையிருந்தாலும் அது ஸாத்விகம் இல்லை. அதனால்தான் பிரம்மசாரி, ஸந்நியாசி இருவருக்கும் அது கூடாது என்று வைத்திருக்கிறது. லோக விஷயங்களைக் கவனிக்க வேண்டிய கிருஹஸ்தர்களுக்கு ராஜஸ குணமும் இருக்க வேண்டுமென்றே தாம்பூல தாரணம் அநுமதித்திருக்கிறது. அதற்காக ராஜஸ குணம் மட்டுமே இருக்கும்படியாக ஓயாமல் தாம்பூல சர்வணம் பண்ணக் கூடாது. நல்ல பதார்த்தம், கெட்ட பதார்த்தம் எதுவானாலும் ஓயாமல் தின்னும் பழக்கமாகப் பண்ணிக் கொள்ளக்கூடாது. நம்மை நம் கண்ட்ரோலில் இல்லாமல் பண்ணித் தன் வசப்படுத்திக் கொள்வதாக எந்தப் பதார்த்தத்தையும் விட்டுவிடக் கூடாது.

ஸாத்விகாஹாரத்தைச் சேர்ந்த தித்திப்புப் பதார்த்தங்கள், நெய் முதலானவை தாமாகவே ஓரளவுக்குமேல் தின்ன முடியாமல் திகட்டிப் போய்விடுவதாலேயே நமக்கு நன்மை செய்கின்றன.

ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

"நீதான் இதற்குத் தகுதியானவன் என்று எங்கள் அபிப்பிராயம். நீதான் இந்த இடைமறித்து அபகரிக்கும் வேலையைச் செய்ய வேண்டும்."

ஒருகணம் வர்மன் கண்ணை மூடினான்.

இது என்ன புதுவித பூதம் கிளம்புகிறது?

திருப்பதிப் பணம் கிடைத்தால் தான் செஞ்சுகா பணயத்திலிருந்து விடுதலை ஆவாள்.

அவள் விடுதலைக்காக அவன் பாடுபட்டுக் கொண்டிருக்கும் போது, இப்படி புதிதாய் பிரச்னையை அவனிடமே புகுத்துகிறார்களே!

மனம் தத்தளிக்க, மெள்ள சிந்துவின் பக்கம் திரும்பினான்.

அவளது ஆழ்மான கண்கள் அவனை தீர்க்கமாக நோக்கின.

மனவெளிக்குள் இருக்கும் ஆன்மீப் பறவையே ஒருமுறை சிறகை அடித்தது.

அவனது இதயம், மனம், உணர்வு, எல்லாமே குழைந்து விட்டன.

சிந்து ஆர்ப்பரிக்கும் கடல் அல்ல!

அமைதியான நதி!

அவள் ஆழமாக, உள்ளே பாயும் சக்தி பெற்றவள்.

"சிந்து!" என்றான் மனம் தடுமாற.

"வீரரே!" என்றாள் அவள்.

"இந்தக் காரியத்தை..." என்று இழுத்தான் அவன்.

"நெருக்கடி முற்றிவிட்டது வீரரே! நாம் இதில் இறங்காமல் இருக்க முடியுமா? நாட்டுக்காக இப்போதாவது ஏதாவது செய்தால் தானே வீடு வாழ முடியும்..."

சிந்துவா? அவளா இப்படிப் பேசுகிறாள்!

பெரியவர் பாக்கு வெற்றிலையை எடுத்தார்.

அவனிடம் மௌனமாக நீட்டினார்.

திரும்பவும் வர்மன் ஒருமுறை சிந்துவைப் பார்த்தான்.

காணக் கிடைக்காத சௌந்தரியமாக அவள் கண்கள் ஒளிவீசின.

அவற்றின் வசீகரம் ஏதோ கிரணங்கள் போல் வெளி வந்து அவனை மூழ்குவித்தன.

மெல்லிய அரும்பாகப் புன்னகை ஒன்று காட்டினாள் அவள்.

"வாங்கிக் கொள் தம்பி! சம்மதம் ஆச்சு."

வர்மன் தாம்பூலத்தை வாங்கிக் கொண்டான்.

நான்காம் நாள் பொம்மராஜு பாளையம் அரண்மனையில் அவன் ஜமீன்தார் முன்னிலையில் உட்கார்ந்திருந்தான்.

திண்டுமேல் சாய்ந்திருந்த கார்வேட் ராஜா, "இனி, என்னிடம் எதுவும் இல்லை! எல்லாம் அந்தத் திருவேங்கடவன் செயலே!" என்று கூறிக் கண்ணை மூடினார்.

(தொடரும்)

# டீவியில் நான்

கோவை அனுராதா

காட்சி 1.

(வாசற்படியில்காலைநீட்டிக்கொண்டு தர்முப் பாட்டி உட்கார்ந்திருக்க, வெளியே இருந்து தூக்க முடியாமல் ஒரு பையைத் தூக்கிக் கொண்டு வந்த பத்மநாபன் கால் தடுக்கிக் கீழே விழு கிறார். பையில் இருந்த பெரிய வெங் காயம் சிதறி ஓடுகிறது.)

தர்மு பாட்டி (மகன் விழுந்ததை லட்சியம் பண்ணாமல்): வெங்காயம் எதுக்குடா...

சுந்தரி: இவரு நடிச்ச சினிமா பார்க்க வறானே... அவங்களுக்கு வெங்காய பக் கோடா, பஜ்ஜி எல்லாம் பண்ணி டிபன் கொடுக்கணுமாம். என்னால முடியாதுன்னு சொல்லிட்டேன். உங்க பேத்திதான் பண்ணப் போறா.

(அப்போது பர்வத வர்த்தினி, பத்ம நாபனின் மகள் வருகிறாள்.)

தர்மு பாட்டி: சொல்றேன்னு கோபப் படாதே பத்து: உன் பொண்ணுக்கு பர்வத வர்த்தினின்னு பேர் வச்சே... மலைமாதிரி வளர்ந்து கல்யாணத்துக்குநிக்கறா. செல்லப் பெண் பாரு. ஒழுங்கா ஒரு வரன் அவ ளுக்குத் தேடக் கூடாதோ?

சுந்தரி: பாருவோட ஜாதகக் காப்பியை கொண்டு போயி மகாலிங்கபுரம் கோவில்ல குடுங்கோன்னு ஒருவாரமா முட்டிக்கிறேன். ஆபீஸ் விட்டு வந்தா நேரா சீட்டு கச்சே ரிக்குப்போயிடறார். நடுவுல இப்படி ஒரு கூத்து. என்னவோ பெரிய சிவாஜி கணே சன்னு நினைப்பு.

காட்சி 2.

(பத்து ஹாலில் டீ. வி. பார்க்க ஏற் பாடுகளைச் செய்து கொண்டிருக்க, பாரு அவசர அவசரமாக வெளியே இருந்து வரு கிறாள்.)

பாரு: அப்பா... எல்லாரையும் வரச் சொல்லியாச்சா?

பத்மநாபன்: அக்கம்பக்கத்துல டீ.வி. இருக்கறவங்களை பார்க்கச் சொல்லியாச்சு. மத்தவங்களை வரச் சொல்லியாச்சு. பத்து இருபது தலை தேறும். அதுக்குத் தகுந்த மாதிரி வெங்காய ப்க்கோடாவும், பஜ்ஜி யும் பண்ணிடும்மா.

பாரு: ஏம்பா... அந்த சினிமாவுல நடிக்றப்போ கூட உங்களுக்கு இப்படித் தான் சொட்டைத் தலையா இருக்குமா?

பத்மநாபன்: சரிதான்... அப்பவெல்லாம் எனக்கு இடுப்பு வரைக்கும் குடுமியிருக்கும். ஞாயிற்றுக்கிழமை ஆபீஸ் லீவுன்னு ஆசைக்கு தாழம்பூ கூட வச்சி பின்னிப் பேன்.

(அப்போது டீ.வி. பார்க்க ஒவ்வொரு வராக வரவே, பத்து வரவேற்கிறார்.)

வாங்கோ... வாங்கோ...

வந்தவர்: கங்ராஜுலேஷன்ஸ்... இதான் மொதல் படமா?

பத்ம: (அசட்டுச் சிரிப்புடன்) ஹி... ஹி... கடைசிப் படமும் இதுதான். உட்காருங்கோ. வேட்டி கட்டினவங்க எல்லாம் பாயில உட் காரலாம் பேண்ட் போட்டவங்க எல்லாம் மோடாவுல உட்காரலாம்.



(ஒவ்வொருவராக வரவே கூட்டம் சேருகிறது.)

சுந்தரி: (பத்மநாபனின் கையைப் பிடித்துத் தனியே அழைத்துச் சென்று)

ஏன்னா... அங்க பாருங்கோ... நாலாவது வீட்டு இந்தி பண்டிதர், கூடவே யாரையோ கூட்டிண்டு வரூரே... ஆளைப் பார்த்தா ஐயனார் மீசையோட ரவுடி மாதிரி இருக்கு. நாலு பொம்மனாட்டிகள் இருக்கற வீட்டுல ரவுடியையெல்லாம் கூப்பிட்டு ஏன் இப்படி ரகளை பண்றேள்?

பத்மநாபன்: போடீ... பைத்தியக்காரி... பெரிய மீசை வச்சவனெல்லாம் ரவுடியா? அந்தப் பிள்ளையாண்டான் இந்தி பண்டிதரோட அத்தை பையனாம். மிலிடரியில இருக்கான். லீவுல வந்திருக்கான். என்னோட படத்தைப் பார்க்க ஆசைப்பட்டு யார் யாரெல்லாம் வரூ பாரு.

சுந்தரி: சரி... சரி... ரொம்ப புகழ்ந்துக்காம வந்தவாளை வான்னு கூப்பிடுங்கோ.

பத்து: வாங்கோ... விளம்பரம் போட்டா அப்புறம் படம்தான். எல்லாருக்கும் படம் ஆரம்பிக்கறதுக்கு முன்னால ஒண்ணு சொல்லிக்கறேன். இந்தப் படத்துல நான் ஒரு சீன்ல வரேன். டான்ஸ் ஒண்ணு வரும். அப்போ ஆடியன்ஸ் க்ரூப்ல நாலாவது வரிசையில மூணாவதா உட்கார்ந்திருப்பேன். கண்ணைச் சிமிட்டாம பார்க்கணும். இல்லேன்னா சட்டுனு போயிடும். நான் வேணும்னா அந்த இடம் வந்தவுடனே ஐயோன்னு கத்தறேனே...

சுந்தரி: போருமே... அபசகுனம் புடிச்ச மாதிரி ஐயோன்னுதான் கத்தணுமா?

பத்மநாபன்: சரி... சரி... சுந்தரி சொல்றதும் சரிதான். ஐயோ வேண்டாம். ஸ்ரீ ராமான்னு கத்தறேன். தோ... போட்டுட்டான்... விளம்பரம் ஹார்லிக்ஸ் வந்தாச்சு.

(அப்போதும் டி.வியில் படம் ஆட ஆரம்பிக்கிறது.)

தர்மு பாட்டி: என்னடா பத்து?... டான்ஸ் வரும்னு சொன்னே... டி.வி.யே டான்ஸ் ஆடறது?

பத்மநாபன்: பேசாதம்மா. எல்லாம் உன்னாலதான். வயசான காலத்துல சும்மா இருக்காம மொட்டை மாடிக்குத் தவழ்ந்துண்டே போயி புடவை ஒலத்தறே. உனக்கு கொடின்னு தெரியறதா இல்லே ஆண்டெனான்னு தெரியறதா...? எழவு... ஆண்டனா ஒயர்ல புடவையைக் கட்டி, ஊசாயிருக்கும். போயி சரி பண்றேன்.

(நாலு கால் பாய்ச்சலில், மொட்டை மாடிக்கு ஓடுகிறார் பத்மநாபன். போகும் வழியில் ஜன்னல் கதவு தலையில் இடிக்கிறது.)

பத்மநாபன்: ஐயோ... அம்மா...

தர்மு பாட்டி: ஏண்டா... தலையில இடிச்



சிண்டயா...? உங்களுக்குல்லாம் தலேயில தாண்டா கண்ணு வைக்கணும்.

பத்மநாபன்: பேசாம இரும்மா... எங்க இடிச்சிண்டாலும் அங்க கண்ணு வச்சா மனுஷனுக்கு இந்திரன் மாதிரி உடம்பு பூரா கண்ணாப் போயிடும். எரிச்சலேக் கிளப்பாம உட்காரு.

(தலேயைத் தடவிக் கொண்டே மேலே ஓடுகிறார். ஆண்டனுவைச் சரி செய்த தும் ஆட்டம் நிற்கிறது.)

பண்டிதர்: மிஸ்டர் பதமநாபன்... படம் இப்ப நல்லா தெரியறது... அச்சா... அச்சா..

தர்மு பாட்டி: அதுதான் சரி பண்ணிட்டானே... இன்னும் என்ன ஆச்சா ஆச்சான்னு?

பத்மநாபன்: (வந்து கொண்டே) ஐயோ.. ஆச்சா இல்லேம்மா... அச்சாங்கறாரு..அப்படின்னு நல்லதுன்னு அர்த்தம்... பேசாம இரேம்மா.

தர்மு பாட்டி: டேய்... பத்து இங்கே வா... ஒரு விஷயம்...

பத்மநாபன்: படம் போடப் போறான்.. இப்ப எதுக்கும்மா கூப்பிடறே?

தர்மு பாட்டி: (மெதுவாக) எதுக்கும் மெழுகுவர்த்தி, தீப்பெட்டி எடுத்து பக்கத்துல வச்சுக்கோ.... திடீர்னு கரண்ட் போயிடப் போறது... தடிதடியா ஆம்பளேங்க இருக்கா... பொம்மனாட்டிகள் இருக்கற விடு.

பத்மநாபன்: ஆமாம்மா... இப்போ லேட் அணேயப் போறதுன்னு எல்லோரும் காத்துண்டிருக்காளா? உனக்கு நல்ல எண்ணமே கிடையாதும்மா.

(அப்போது கரண்ட் போய் இருள் சூழ்கிறது.)

பத்மநாபன்: கரு நாக்கு... சொன்னவுடனே பொக்குனு போயிடுத்தே...

(அப்போது கூட்டத்தில் கசமுசவென சத்தம் வரவே)

அமைதி... அமைதி... இன்னும் அஞ்சு நிமிஷத்துல கரண்ட் வந்துடும்.. படம் ஆரம்பிச்சி அரை மணிநேரம் கழிச்சித்தான் நீங்க ஆவலோட எதிர்பார்க்கற என் சீன் வரும். கவலேப்பட வேண்டாம். அதுவரைக்கும் கையில இருக்கற வெங்காய பக்கோடா, பஜ்ஜியை சாப்பிடுங்கோ... நான் மெழுகு திரி கொண்டு வரேன்.

(இருட்டில் தடவிக் கொண்டே பத்மநாபன் முன்னேற, குறுக்கே சுந்தரியும் வர இருவரும் மோதிக் கொள்கிறார்கள்.)

தர்மு பாட்டி: என்னவோப்பா... இன்னிக்குக் காலேயிலே இருந்தே நீ ஒவ்வொரு இடமா மோதிக்கிறே. ஏகத்துக்கு வீங்கிண்டு அடையாளமே தெரியாம போயிடப் போறது.

(அப்போது கரண்ட் வந்து விடுகிறது. டீ. வி. யில் படம் தெரிகிறது.)



பிரின்ஸிபால்: "உன் பெயர் என்னன்னு சொல்லுடா, கண்ணு!"
பையன்: "ஸ்ரீரங்கம் ரகுவீர பிரசன்ன ஹரி முகுந்த தாமோதர சயன விராக்ரம கோபால கிருஷ்ண விஜய்."

பண்டிதர்: என்ன பத்து சார்... டீ.வி.யில சினிமாவே ஆரம்பிச்சுட்டான் போல இருக்கே.

பத்மநாபன்: ஆரம்பிக்கட்டும்... ஆரம்பிக்கட்டும்...நான் வர்ற சீன் இன்னும் பத்து நிமிஷம் இருக்கு. எல்லாரும் அமைதியா இருந்து தயவு செய்து கவனமா பார்க்கணும்.

(அமைதி நிலவ, டீ.வியில் படம் ஓடிக் கொண்டிருக்கிறது.) அப்போது தடங்கலுக்கு வருந்துகிறோம் கார்டு டீ.வியில் வருகிறது.)

பர்வத: ஏம்ப்பா...பிலிம் கட்டானு,உங்க போர்ஷன் போயிடப் போறது. மொத்தமே பதினேஞ்சு பிரேம்லதானே சொன்னேள்.

பத்மநாபன்: சே... சே... அப்படி எல்லாம் பண்ண மாட்டா. நாம இத்தனே ஆசையா உட்கார்ந்திருக்கோம். நல்லா ஓட்டி, ரீவைண்ட் பண்ணித்தான் போடுவான். அவங்களுக்குத் தெரியாதா?... இந்த மாதிரி படத்தையெல்லாம் தியேட்டர்ல பார்க்க முடியாது. டீ.வியிலதான் பார்க்க முடியும்னு.

(மறுபடியும் டீ.வியில் படம் தொடர்கிறது.)

**பத்மநாபன்: வந்தாச்சு... வந்தாச்சு... யாரும் கண் கொட்டாம பாருங்கோ. இந்த சரணம் முடிஞ்சவுடனே கூட்டத்தைக் காண்பிப்பான்...**

(அப்போது டீ.வி. திரையில் படத்தின் இப்பகுதியை அளிப்பவர்கள் -சர்மா வாஷிங் பவுடர் என்ற வரிகள் வருகிறது. பத்மநாபனின் முகத்தின் மேல் சரியாக வெள்ளே கவுன் போட்ட ஒரு பெண்ணின் உருவம் விழுகிறது.)

நல்லா பாருங்கோ... அந்தப் பொண்ணேட பின்னுடிதான் நான் இருப்பேன்... ஐயோ... நாசமாப் போக,... இந்த சமயத்துலதான் இந்த விளம்பரம் போடணுமா?... ஆ... சுந்தரி... எனக்குத் தலேயை சுத்துதே... போச்சு... போச்சு... என் சினிமா போச்சு.. (பத்மநாபன் மயங்கிக் கீழே விழுகிறார்.)

நீங்கள் சரியான பாதையில் போய்க் கொண்டிருந்தாலும், அதில் வெறுமே உட்கார்ந்துவிட்டால் அரைபட்டுப் போவீர்கள்.
—வில் ராஜர்ஸ்.

# இவருடைய புன்னகைக்குப் பாதுகாப்பு அளிக்கப்பட்டுள்ளது



## இந்த ஃப்ளோரைட் பாதுகாப்பினை பினாகா ஃப்ளோரைட் அளித்துள்ளது




உங்கள் பற்கள் பல்லாண்டு நீடித்திருக்க, சொத்தை விழுவதிலிருந்து அவைகளைப் பாதுகாக்க வேண்டும். இதோ பினாகா ஃப்ளோரைட். அவைகளுக்கு ஃப்ளோரைட் மூலம் இன்றியமையா பாதுகாப்பளிக்கிறது. ஏனெனில், தீங்கு விளைவிக்கும் அமிலங்கள் பற்களின் பரப்பைத் தாக்கும் போது, பற்களினால் கிரகிக்கப்பட்ட ஃப்ளோரைட், பல்லின் எனாமலுக்கு சொத்தையை எதிர்க்கும் ஆற்றலைக் கொடுக்கிறது. இதன் மூலம் பற்சிதைவு ஆரம்ப கட்டத்திலேயே தடுத்து நிறுத்தப்படுகிறது. பற்சிதைவையும் சொத்தையையும் பினாகா ஃப்ளோரைட் உபயோகித்து தடுத்து நிறுத்துங்கள்.

உங்கள் பற்கள் பல்லாண்டு வாழ

**பினாகா ஃப்ளோரைட்**
டூத்பேஸ்ட்

இந்தியாவின் முதன் முதல் சக்தி வாய்ந்த ஃப்ளோரைட் பற்பசை

ULKA-HCG-BF-11-85-TAM

# வந்திடுவார் வரிசை வரிசையாய் உங்கள் அன்பு மகளை மணம் முடிக்க. ஆனால் உங்களுக்கு வேணடுமா இத்தனை 8,09,000 பேரும்?





உங்கள் மகளின் உயரம் 4' 10" (145 செமீ) —அவளுக்கு, அழகராயினும், பலசாலியாயினும் 6' 4" (190 செமீ) உயரமான கணவர் பொருத்தமாகுமா? அதேபோல, கட்டையான 5' 5" (162.5 செமீ) உயர வாலிபருடன் 5' 9" (172.5 செமீ) உயர நெட்டை அழகி ஒட்டி வாழமுடியுமா? இதிலிருந்து புரிவது இதுதான். டைம்ஸ் ஆஃப் இந்தியாவின் திருமணப் பத்திகளிலே விளம்பரம் செய்யும்போது தேவையான தகவல்களை திறமுடன் தந்திடுங்கள். உங்கள் விருப்பத் தேர்வுகளைத் தெரிவித் திடுங்கள். திருமண விண்ணப்ப பட்டியலை முன்னமே குறுக்கிட உதவுகிறது அது. பொருந்தாத நபர்களுக்கு பதில் தரவேண்டாம் அல்லவா? அது நேரத்தையும் வேலையையும் மிச்சமாக்குகிறது. சரியான தேர்வினை விரைவாக முடித்திட உதவுகிறது டைம்ஸ் ஆஃப் இந்தியா.

டைம்ஸ் ஆஃப் இந்தியாவின் திருமணப் பத்திகள்.

THE TIMES OF INDIA

ACIL–BC–38/85.D-Tam.

காட்சி 3.

(ஹாலில் பத்மநாபன் ஈசிசேரில் சாய்ந்துகொண்டிருக்கிறார். அவரின் உடம்பு முழுவதும் ஊமைக் காயமாகப் பல இடங்களில் புடைத்துக் கொண்டிருக்கிறது. பக்கத்தில் சுந்தரி நின்றுகொண்டு ஒத்தடம் கொடுக்கிறாள்.)

சுந்தரி: என்ன சினிமாவோ? இப்படி உடம்பு பூரா எலுமிச்சம் பழம், எலுமிச்சம் பழமா வீங்கிண்டதுதான் மிச்சம்.

தர்மு: பக்கோடாவுக்கும், பஜ்ஜிக்கும் செலவழிச்ச காசு இருந்தா நம்ம பாருவை ரெண்டு மாப்பிள்ளை வந்து பார்த்துட்டுப் போயிருப்பான். பொறுப்பே இல்லேடா பத்து உனக்கு.

பத்மநாபன்: நானே நொந்து போயிருக்கேன். நீ ஏம்மா குத்தறே?

(அப்போது இந்தி பண்டிதர், அந்த மீசைக்கார பையனுடன் வருகிறார்.)

சுந்தரி: இன்னும் எதுக்கு இந்தி பண்டிதர் வரூரு...? நேத்தைய சினிமாவுக்குத்துக்கம் கேக்க வராரா?

பண்டிதர்: நமஸ்காரம்... பத்மநாபன் சார்... நம்ம பார்த்தசாரதி உங்ககிட்ட நஷ்ட ஈடு கேட்டு வந்திருக்கார்.

பத்மநாபன்: நஷ்ட ஈடா?... எதுக்கு?

பண்டிதர்: நேத்தைக்கு ஒரு பஜ்ஜியும், பக்கோடாவும் கொடுத்தேளே... அதைச் சாப்பிட்டதில இருந்து தூக்கமே வரலையாம்.

பத்மநாபன்: ஐயையோ... அது சோயாபீன்ஸ் எண்ணெய் இல்லேயே... அசல் கடலை எண்ணெயாச்சே...

பண்டிதர்: அது இல்லையா... உங்க பொண்ணு பண்ணின டிபன் ஆச்சே. அதைச் சாப்பிட்டுத்தான் தூக்கம் வரலையாம். (பண்டிதர் பார்த்தசாரதியை ஒரு இடி இடிக்க, அதுவரை பாருவை ஓரக்கண்ணால் பார்த்துக்கொண்டிருந்த அவன் ஒருநிலைக்கு வருகிறான்.)

பார்த்த: ஆமா சார்... எனக்கு வெங்காயம்னு ரொம்பப் பிடிக்கும். அந்த வெங்காயத்துல இப்படியெல்லாம் ஜீவனுள்ள டிபன் பண்ண முடியும்னு காண்பிச்ச உங்க பொண்ணுக்கு ஆயிரம் கோடி தாங்க்ஸ். நான் சைவம். மிலிடரியில உப்பு சப்பு இல்லாம சாப்பிட்டு, நாக்கு செத்துப் போச்சு. எங்கிட்ட பணம் காசு நிறைய இருக்கு. நல்லா சமைக்கிற மனைவிதான் வேணும். சீர் செனத்தி எந்த எதிர்பார்ப்பும் கிடையாது. நீங்க மனசு வச்சா உங்களை ஆசையா மாமான்னு கூப்பிடுவேன்... (மீசையைப் பார்த்து வெட்கப்பட்டு பர்வத வர்த்தினி, சிரித்துக் கொண்டே ஓட, அதைப் புரிந்து கொள்கிறார் பத்மநாபன்.)

பத்மநாபன்: மாப்ளே, நீங்க சாதாரணப் பிறவி இல்லே... இந்த அற்ப மானிடப் பிறவிகளுக்கு வெங்காயத்தோட மகிமையைப் புரிய வைத்த மகான்...

(மாமனாரும், மாப்பிள்ளையும் கட்டித் தழுவுகிறார்கள்.)

# "கிராஸ் டாக்"



**போட்டி: 1**

நீங்கள் அவசரமாக போன் பேச எண்ணுகிறீர்கள். கிராஸ் டாக் கேட்கிறது. கோபப்படுவீர்களா? ரசிப்பீர்களா? அப்போது நீங்கள் கேட்ட ரசமான உரையாடல் அல்லது நீங்களும் கலந்து கொண்டு பேசிய உரையாடல் நினைவிலிருந்தால் கீழே வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப் பக்கத்தைக் கத்தரித்து அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு. தவிர குலுக்கல் முறையில் ஒருவருக்கு விலையுயர்ந்த வி.ஐ.பி. ஸூட்கேஸ். உறையின்மேல் "கிராஸ் டாக்" என்று அவசியம் குறிப்பிடவும்.

**முடிவு தேதி: 20.5.85.**

**52 விலையுயர்ந்த வி. ஐ. பி. சூட்கேஸ்கள் உங்களுக்காகக் காத்திருக்கின்றன. வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு பெறவும்.**

**வி.ஐ.பி.ஸூட்கேஸ் பரிசுத்திட்டம்**

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

..............................

# அருணோதயம் தரும் அற்புதமான நாவல்கள் – கதைகள்

ரமணிசந்திரன் எழுதிய

| | ரூ. பை. |
|---|---|
| காதலென்னும் சோலையிலே (இதுவரை வெளிவராத புதிய நாவல்) | 20.00 |
| வெண்மையில் எத்தனை நிறங்கள் | 20.00 |
| பூங்காற்று | 11.00 |
| நாதசுர ஓசையிலே | 11.00 |
| மயங்குகிறாள் ஒரு மாது | 15.00 |
| ஒருமலர் | 10.00 |
| தொடு கோடுகள் | 11.00 |
| விடியலைத் தேடும் பூபாளம் | 9.00 |
| மதுமதி | 7.00 |
| ஒரு கல்யாணத்தின் கதை. | 7.00 |

அனுராதா ரமணன் எழுதிய

| | |
|---|---|
| தாகம் தீர்க்காத மேகங்கள் | 15.00 |
| ஒரு வீடு இரு வாசல் | 15.00 |
| கனவுப் பிரதேசங்கள் | 15.00 |
| பாலைவனப் பறவைகள் | 12.00 |
| வசந்தகாலப் பூக்கள் | 14.00 |
| சொல் ஒன்று வேண்டும் | 16.00 |
| நாயகன் நானே வருவான் | 16.50 |
| கோபுரத்து பொம்மைகள் | 8.00 |
| மூடிக் கிடக்கிறது நெஞ்சம் | 8.00 |
| பெண்ணுக்கு எத்தனை இதயம் | 16.50 |
| முத்தமிட நேரமில்லை | 9.00 |
| ஒரு காதல் சாம்ராஜ்யம் | 9.00 |
| பொய்ப் பூக்கள் | 8.00 |
| சண்டிக் குதிரைகள் | 6.00 |
| சொந்தமென நீ இருந்தால் | 10.00 |

ராஜேந்திர குமார் எழுதிய

| | |
|---|---|
| சுமைதாங்கி (புதிய நாவல்) | 10.00 |
| கன்னத்தில் ஒரு முத்தம் | 8.00 |
| ஒரு இரவு நேர ஒத்திகை | 15.00 |
| கதவு இல்லாத கனவுகள் | 10.00 |
| என் இனிய வசந்தமே | 10.00 |
| அதுக்கு இது அல்ல வயது | 9.00 |

சுஜாதா எழுதிய

| | |
|---|---|
| செப்டம்பர் பனி | 15.00 |

இன்னும் ஆயிரமாயிரம் நூல்கள். தேவையான புத்தக விலையுடன் பதிவுத் தபால் செலவுக்கு ரூ 3.50 சேர்த்து அனுப்பவும்.

## அருணோதயம்

போன்: 847553

3, கெளடியா மடம் சாலை

இராயப்பேட்டை - சென்னை 600 014

# ஸ்ரீ ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் பிருந்தாவனம் திருவையாறு

தஞ்சாவூர் மாவட்டத்தில் தக்ஷிண கைலாஸம் என்று புகழ் பெற்ற திருவையாறு க்ஷேத்திரத்தில் கலியுகக் கண்கண்ட தெய்வமாயும் அனைவராலும் பூஜிக்கப்படுபவரும் ஆகிய ஸ்ரீ ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளின் மிருத்திகா பிருந்தாவனம் பிரதிஷ்டை செய்யும் உன்னத நோக்கத்தோடு முறைப்படி ஆரம்பிக்கப்பட்ட பணி தற்போது பிருந்தாவன கர்ப்பக்கிரஹம், பிரார்த்தனை மண்டபம் ஆகியவைகள் கட்டி முடிக்கப்பட்டு மின் விளக்குகள் போடப்பட்டு வருகின்றன.

பாரதம்பூராவிலும் உள்ள பக்தர்களிடமிருந்து நன்கொடைகளாகப் பெறப்பட்ட நிதியிலிருந்து இப்புனிதப் பணி சீரிய முறையில் நடைபெற்று வருகிறது. இப்பிருந்தாவனம் எதிர்வரும் மே திங்கள் கடைசி வாரத்தில் பிரதிஷ்டை செய்ய மந்த்ராலயம் ஸ்ரீ ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் மடத்தின் பீடாதிபதிகள் "ஸ்ரீ ஸ்ரீ சுஜயீந்திர தீர்த்த ஸ்வாமிகள்" அவர்களின் அருள் ஆசியினால் நிச்சயிக்கப்பட்டுள்ளது.

இப்பிருந்தாவனத்திற்கு இன்னும் சமையல் அறை உணவுக் கூடம் மற்றும் அன்றாட பராமரிப்புக்குத் தேவையான பணிகள் நடைபெறவேண்டியுள்ளன. எனவே இந்த விளம்பரத்தைக் கண்ணுறும் பக்தர்கள் இப்புனிதப்பணியில்தாங்களும்பங்கேற்றுத் தங்களால் இயன்ற உதவியைப் பொருளாகவோ பணமாகவோ அளித்து ஸ்ரீ ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளின் அருளுக்கு பாத்திரர்களாகும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

**நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி:**

T. R. முரளி
செயலர்

ஸ்ரீ ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள்
மிருத்திகா
பிருந்தாவன பிரதிஷ்டாபன கமிட்டி
திருவையாறு
தஞ்சாவூர் மாவட்டம்
613204.

சர்வதேச இளைஞர் ஆண்டு களை கட்டி விட்ட சூழ்நிலையில் இந்தியாவிலேயே வயதில் இளைய எம்.எல்.ஏ. தமிழ் நாட்டில் இருக்கிற பெருமையை அனுபவித்துக் கொண்டே பேட்டிக்குப் போகிறோம். குடிசைகளில் இந்தியா வாழ்கிறது என்ற அண்ணல் காந்தியின் மணி வாக்கு நினைவுக்கு வருமாறு அடுத்த பெருமை காத்திருக்கிறது. அவர் குடிசைப் பகுதியில் குடியிருப்பவர். அழுத்தமான அரசியல் ஈடுபாடு. பாரம்பரியமாகவே ஒரு கொள்கைப் பிடிப்பு. உண்மையாகவே உழைக்கிற துடிப்பு. இளைய இந்தியா இப்படி இருந்தால்... என்று நம் கனவு விரிகிறது.



• பரிதி இளம் வழுதி, எம்.எல்.ஏ.

# குடிசையில் குடியிருக்கும் எம்.எல்.ஏ

''வாங்க ஸார்!'' என்று வரவேற்றார் இந்தியாவிலேயே இளைய சட்டமன்ற உறுப்பினரான பரிதி இளம்வழுதி.

''சென்னை ஐ. ஜி. அலுவலகத்தின் பின்புறம் உள்ள கைலாசபுரம் குடிசைப் பகுதி இந்தக் குடிசைப் பகுதியில் ஒரு எம்.எல்.ஏ குடியிருப்பாரா என்ற கேள்விக் குறியுடன் ஒருவரிடம் 'எம். எல். ஏ. வீடு எங்கே?' என்று கேட்டவுடன், எம். எல். ஏ. வீட்டு முன்பாகவே நம்மைக் கொண்டுவிட்டார் பதில் சொன்னவர். வீடோ 10' X 8' தான் இருக்கும்.

இளம் வழுதியின் அப்பா இளம்பரிதி எம். எல். சி. ஆக இருந்தவர். குடும்பம் திராவிட பாரம்பரியம் உள்ளது. ஆனால் இளம் வழுதிக்கு அரசியல் ஆர்வம் தூண்டி விட்டது கலைஞரது பேச்சுக்கள்தான்.

''1975—76 கால கட்டத்தில், எமெர்ஜென்ஸி காரணமாகப் பொதுக் கூட்டங்

• எம். எல். ஏ. குடியிருக்கும் குடிசைப் பகுதி



கலை மணம் பரப்பும் மதுரை மாநகரில்
மறக்க முடியாத மாட்சிமை கொண்ட

## திருமலை நாயக்கர் மகாலில்

# ஒலி-ஒளிக் காட்சி

காலச் சக்கரம் என்றாவது பின்னோக்கிச் சுழலுமோ?
இது என்ன — கனவா? நினைவா? 1636-ம் ஆண்டிற் கண்ட
அதே காட்சிகள், திருமலை நாயக்கர் மகாலில் விழித்தெழுந்து
கண் எதிரே வெளிச்சத்தில் அலை மோதும்.

வரலாற்றுப் புகழ் மிக்க திருமலை மன்னனின் கதை மட்டுமல்ல.
மூதூராம் மாமதுரையின் பொற்காலமே — வரலாற்றுச் சிறப்பே
உயிர்த்தெழுகிறது.

புகழ்முடி சூடிடும் வரலாறு. புயலெனச் சீறும் ஒலி-ஒளி வெள்ளம்.

*காண வாரீர்!*

காட்சி நேரம் : ஆங்கிலம் — மாலை 6.45 முதல் 7.45 வரை
தமிழ் — இரவு 8.00 முதல் 9:00

கட்டணம் :
ரூ. 3/-
ரூ. 2/-
ரூ. 1/-



இயக்குநர்,
சுற்றுலாத் துறை,
தமிழ்நாடு அரசு சென்னை-600 009.

DIPR/1021/85 (R)

களில் பேச முடியாத நிலை. திருமண மண்டபங்களில் தான் பேச வேண்டியிருந்தது. அவ்வாறு கலைஞர் போன ஒவ்வொரு கூட்டத்தையும் விடாமல் சென்று கேட்டு, தி.மு.க. இயக்கத்தில் என்னை இணைத்துக் கொண்டேன்' என்கிறார் இளம்வழுதி.

பொதுத் தேர்தல் வந்த போது முதலில் எழும்பூரில் நிற்கச் சொன்ன கட்சி பின்னர், பெரம்பூரில் நில்லுங்கள் என்று கட்டளையிட்டதாம். அங்கே அவரை எதிர்த்துப் போட்டியிட்டதோ மக்களுக்கு நன்கு அறிமுகமான சத்தியவாணிமுத்து. மேலும், வேட்பாளர்களில் ஒருவர் கொலையாகிவிட, பொதுத் தேர்தலுடன் நடக்க வேண்டிய பெரம்பூர் சட்டமன்றத் தேர்தல் தள்ளி வைக்கப்பட்டது. பொதுத் தேர்தலிலோ தி. மு. க. விற்குப் பலத்த அடி. முற்றிலும் சாதகமற்ற சூழ்நிலையில் தேர்தல் களத்தில் குதித்தார் இளம்வழுதி.

''காலை ஏழு மணிக்கு நடந்தே பிரசாரத்தை ஆரம்பிப்பேன். 1,63,000 பேர் உள்ள அந்தச் சட்டமன்றத் தொகுதியில், 90 சதவிகிதத்தினரை நேரிலேயே சந்தித்தேன். என்னை எதிர்த்து நின்ற அம்மையார் 'கூட்டங்களில் பேசும் பேர்து எதிர்த்து நிற்பவன் என் மகன் போல' என்று பேசினார். இதற்கு நான் ''என்னை மகன் போல் என்று குறிப்பிடுகிறார்; ஒரு பொறுப்புள்ள மகனின் கடமை வயதான தாய்க்குப் பரிபூரண ஓய்வு கொடுக்க வேண்டியதுதான். அதனால் தேர்தலில் தோல்வியுறச் செய்து அவருக்கு ஓய்வு கொடுங்கள்' என்று பேசினேன். மேலும் எங்கள் தலைவர் எனக்காகச் செய்த பிரசாரம் என் வெற்றிக்கு இன்னொரு முக்கிய காரணம்.''

வேட்பாளர் மனு தாக்கல் செய்யும்போது, இளம்வழுதிக்கு 25 வயது. மூன்று சகோதரிகள், இரண்டு சகோதரர்கள். இளம்வழுதிக்கு இன்னும் கல்யாணமாகவில்லை. மூத்த மகன். இன்னும் பொறுப்புகள் இருக்கின்றன. ''என் சகோதரிகளில் இரண்டு பேருக்காவது திருமணம் செய்து கொடுத்துவிட்டுத் தான் என் திருமணத்தைப் பற்றி யோசிக்க வேண்டும்'' என்கிறார் இளம்வழுதி.

''உங்கள் கல்யாணம் காதல் கல்யாண

மாக இருக்குமா?" என்ற கேள்விக்குப் பல மாகச் சிரிக்கிறார்.

"என்னுடைய முழுக் கவனமும் மக்களின் பிரச்னைகள் மேல்தான் இருக்கிறது. பெரம்பூர் தொகுதி 'கைவிடப்பட்ட தொகுதி. அதனால் முழுமூச்சாக, வேலை செய்ய வேண்டியிருக்கிறது. இந்தச் சூழ்நிலையில் காதலிக்க ஏது நேரம்? ஆனால் எனக்கு மனைவியாக வரப் போகிறவள், சமுதாயத்தையும் வீட்டையும் சேர்ந்து கவனிப்பவளாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறேன்."

இளம்வழுதி படித்தது வெஸ்லி உயர்நிலைப் பள்ளியில். 'நன்றாகப் படித்து முன்னுக்கு வரவேண்டும் என்ற அப்பாவின் பேச்சை அரசியல் ஆர்வம் காரணமாகக் கேட்காமல், படிப்பைப் பாதியில் விட்டார்.

"நான்கு புத்தகங்கள் படிப்பதற்குப் பதிலாக நான்கு பொதுக் கூட்டங்கள் கேட்டால் பொது அறிவு பெருகும் என்று சொல்லுவார்கள். மாலை நேரக் கூட்டங்களே எனக்கு மாலை நேரக் கல்லூரியாக விளங்கி அறிவைப் பெருக்கிக் கொள்ள உதவின" என்கிறார் இளம்வழுதி.

இன்று சென்னை மாவட்ட தி.மு.க. இளைஞர் அணியின் தலைவராக இருக்கும் இளம்வழுதி ஆயிரத்துக்கும் மேற்பட்ட பொதுக் கூட்டங்களில் பேசியிருக்கிறார்.

கைலாசபுரம் பகுதியில், 'குடிதண்ணீர் பிரச்னை, தண்ணீர் வரவில்லையா அல்லது கொசுத் தொல்லையா, மக்களைப் பாதிக்கும் வேறு எந்த பிரச்னையாக இருந்தாலும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் சென்று அதைத் தீர்த்து வைப்பதில் முதலில் நிற்பவர் பரிதி இளம்வழுதிதானாம்.

"இன்று நான் எதிர்க்கட்சி எம்.எல்.ஏ. வாக இருந்தாலும், என்னைச் சந்திக்கும் தொகுதி மக்களிடம் 'இயன்றவரை பிரச்னைகளைத் தீர்த்து வைப்பதில் நடவடிக்கை எடுப்பேன். அதிகாரிகளின் மெத்தனத்தினாலோ அல்லது கட்சி மனப்பான்மையாலோ மக்கள் பிரச்னைகளைத் தீர்த்து வைப்பதில் இடையூறு ஏற்பட்டால், என்னுடன் போராட நீங்களும் தயாராக இருக்க வேண்டும்' என்று சொல்லியிருக்கிறேன்" என்கிறார் இளம்வழுதி.

"சட்டசபை அனுபவம் எப்படி இருக்கிறது?"

"விவாதங்கள் பயனுள்ளதாக அமைந்து மக்களுக்கு நன்மை விளைவிக்கும் என்று கருதி சட்டமன்றத்தில் ஆர்வத்துடன் நுழைந்தால், அங்கே முட்டையைப் பற்றியும், எலிக்கறி பற்றியும் பேசுகிறார்கள். பொன்னான நேரத்தை அனாவசியப் பேச்சில் ஆளும் கட்சி உறுப்பினர்கள் விரயம் செய்து கொண்டிருப்பதை நினைத்தால் வேதனையாக இருக்கிறது."

தேர்தலில் ஜெயித்துக் கலைஞரிடம் ஆசி பெறச் சென்றபோது அவர், மாநகராட்சித் தேர்தல் நடக்காமல், மக்கள் படும் வேதனைகளைச் சொல்லி, "நீ எம்.எல்.ஏ. என்பதை மறந்து விடு. கவுன்ஸிலராக நினைத்துச் செயல்படு" என்று கூறி அனுப்பினாராம்.

**பேட்டி: பிரியன்**
**படங்கள்: தாமு**

# மாணவத் தோழனே வா!

மாணவத் தோழனே!

வா!

உன்னை வரவேற்க உனது தேர்வு மண்டபத்தின் வாசலில் நான் கவலை சொட்டச் சொட்டக் காத்திருக்கிறேன்!

பரீட்சைக் கூடத்துக்குள் நீ பலியாடாய் நுழைகிறபோதே என் அடிமனம் அழ ஆரம்பித்து விட்டது.

இதோ! மூன்றுமணி நேர யுத்தத்திற்குப் பிறகு நீ முகம் கறுத்து வருகிறாய்.

உன் இதயத்தில் வழியும் ரத்தத்தையும், உனது மேனியில் வடியும் வேர்வையையும் துடைத்துக் கொள்வதற்குத் துண்டு கொடுக்கவே நான் கவலை சுமந்து காத்திருக்கிறேன்.

இந்தத் தேர்வுமுறை உன்னைப் போலவே எனக்கும் உடன்பாடில்லை.

இங்கே தேர்வு என்பது அறியாமையை அளக்கிற அளவுகோல்தானே தவிர அறிவை அளக்கும் அளவுகோலன்று.



சிண்டிகேட்டின் பூட்ஸ் கால்கள் உங்கள் மூளைகளின்மேல் நடந்து போவதை நான் மூர்க்கமாக எதிர்க்கிறேன்.

ஆயினும் இந்தக் கல்விமுறை இப்படியே இருக்கும் வரை, இந்தப் பரீட்சை முறை இவ்வாறே நீடிக்கும் வரை நாமும் அதை வெற்றி கொண்டே ஆக வேண்டும்.

வேதாளத்துக்கு வாழ்க்கைப்பட்டால் முருங்கை மரத்தில் ஏறித்தானே தீர வேண்டும்! இதைத்தான் போன வாரம் சொன்னேன். இப்போது எனது பழைய அனுபவம் ஒன்றைக்கூற எண்ணுகிறேன் அது உனக்குப் பயன்படும் என்பதால்.

பச்சையப்பன் கல்லூரியில் நான் எம்.ஏ. படித்துக் கொண்டிருந்த ஆண்டுகளின் ஆரம்ப நாட்களில்நான் கடுமையாய் உழைக்கவில்லை.

இலக்கியக் கூட்டங்களுக்குச் செல்வதிலேயே எனது காலத்தையெல்லாம் கரைத்து விட்டேன்.

[illegible]க்குச் சில மாதங்களே இருந்தன [illegible] பாடப் பகுதிகளெல்லாம் முன்பே படித்த பகுதிகள்தாமே என்ற இறுமாப்பில் இருந்து விட்டேன்.

இடையில் மாதிரித் தேர்வு வந்தது.

மிகவும்ரசனையோடுதேர்வுஎழுதினேன்.

இரண்டரை மணி நேரம் முடிந்த பிறகுதான் இன்னும் ஒருகேள்விக்கான பதிலையே முடிக்கவில்லை என்று கண்டு கொண்டேன்.

கலங்கிப் போனேன். அன்று நான் புத்தனானேன்.

தேர்வு என்பது — எவ்வளவு நிறையப் படித்திருக்கிறோம் என்பதல்ல. எவ்வளவு விரைவில் பதிவுசெய்கிறோம் என்பதுதான்.

ஒவ்வொரு விடைக்கும் திட்டவட்டமான வடிவம் வேண்டும் என்று தீர்மானித்தேன்.

அன்றிலிருந்து கல்லூரி நூலகத்திலேயே கூடுகட்ட ஆரம்பித்தேன்.

இதயம் உருக உருக — இமைகள் கருக்கருக — ஏறத்தாழ நூற்றெண்பது கட்டுரைகள் தயாரித்தேன்.

நாம் எறிகிற எந்தக் கல்லும் வானத்திற்கு வெளியே போய் விழமுடியாது; அதேபோல் கேட்கப்படுகிற எந்தக் கேள்வியும் இந்தக் கட்டுரைகளுக்கு வெளியே கேட்க முடியாது என்று என் உழைப்பு எனக்கு உத்தரவாதம் கொடுத்தது.

பச்சையப்பன் கல்லூரியிலேயே நான் ஒருவன் மட்டும்தான் முதல் வகுப்பு (First Class) என்று அறிவிக்கப்பட்டேன்.

எனவே இளைஞனே! நீ அறிந்து கொண்டதை வகைப்படுத்தி வைத்துக்கொள்; கற்றதைத் தொகைப்படுத்தி வைத்துக்கொள்.

விடையின் வடிவத்தை நீ ஏற்கெனவே தீர்மானித்து வைத்திருக்க வேண்டும்.

ஏனென்றால், களத்திற்கு வந்த பிறகு நீ கத்தியைத் தீட்டிக் கொண்டிருக்க முடியாது.

நான் பல இளைஞர்களைச் சந்திக்கிறேன். 'பரீட்சை நெருங்கட்டும் பார்த்துக் கொள்ளலாம்' என்றிருக்கிறார்கள். கடைசியில் பரீட்சை இவர்களைப் பதம் பார்த்து விடுகிறது! நல்லவேளை நான் தப்பினேன்! நீயும் என்னைப் போல் தக்க சமயத்தில் விழித்துக் கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன்.

இந்த ஆண்டு பரீட்சைகள் உனக்கு முடிந்துவிட்டிருக்கலாம்; ஆனால் அடுத்த கல்வி ஆண்டுத் தொடக்கம் அதிக தூரத்தில் இல்லையே! எனவேதான் சொல்லி வைக்கிறேன்.

[illegible] வாரம் சந்திப்போம்.

புகைப்படம்: யோகா



# சத்துணவுத் திட்டத்தைச் சீரமையுங்கள்

வட்டமேஜை

* முதல்வருக்கு வாசகர்கள் அளித்த அனைத்து யோசனைகளும் அருமை.
கோவை, ரம்யா.

* திரு. ரமேஷ் கிருஷ்ணனைப் போல் சிம்பிளாகத் திருமணம் செய்து கொள்ள "நம் இளைஞர் சமுதாயம்" முன்வருமானால் வெகுவிரைவில் நம் நாடு முன்னேறிவிடும்!
மன்னார்குடி, ஜி. நீலா.

* இதய சுத்தத்தில் ஜனித்த உறவுகள் எந்த வகையிலாவது தொடரத்தான் செய்யும் என்பதைப் பத்மா கிருஷ்ணனின் கதை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் காட்டிவிட்டது.
ஸ்ரீரங்கம், ஆர். கோபாலன்.

* ரோமேஷ் பண்டாரியின் பாகிஸ்தான் விஜயம் பற்றிய ஆசிரியரின் கட்டுரை சற்று சிந்திக்க வைத்தது.
கோவை, என். பாலகிருஷ்ணன்.

* ஒரு வருடமாகப் பெண்களுக்கு முன்னுரிமை கொடுத்து 'ராகமாலிகா பட்டுப் புடவை' வழங்கி, இப்போது தொடர்ந்து ஆண்களுக்கு உபயோகமாகும் வகையில் வி.ஐ.பி. சூட்கேஸ் வழங்க ஆரம்பித்த கல்கியின் நடுநிலைமை பாராட்டுக்குரியதே!
கொப்பம்பட்டி, அன்பு மதியழகன்.

* உயிராய் இருந்தவரைப் பிரிவதன் துயரத்தையும், அதனால் ஏற்படும் மனத் தவிப்புகளின் ஆற்றாமைகளையும் மிக இயல்பாகத் தந்திருந்த 'யாரால் சொல்ல முடியும்' சிறுகதை பல குடும்பங்களின் நிஜப் பிரதிபலிப்பே!
திண்டுக்கல், எஸ். பி. தியாகராஜன்.

* இன்குலாப் கவிதைக்கு சரியான சவுக்கடி கொடுத்திருந்தார் "முரசொலி" பாண்டியன்.
நெல்லிக்குப்பம், ஜெ. முகம்மது பாரூக்.

* 'சின்ன வயிறு பெரிய வயிறு' சிறுகதை மூலம் ஆழமான வறுமையை மனதை உருக்கப் படைத்துவிட்டார் பிரதிபா ராஜகோபாலன்!
போடிநாயக்கனூர், கவி கண்ணன்.

* நாயர் ஸான் சொன்ன கருத்துக்கள் மூலம் ஜப்பான் நாட்டு இளைஞர்களின் படிப்பு, வேலை வாய்ப்பு, திருமணம், விளையாட்டு, போன்றவற்றைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் அறிந்து கொள்ள முடிந்தது.
லால்குடி எம். இராஜேந்திரன்.

* "இது இளைஞர் அணி"—இல் தரும் தகவல்கள் என் போன்ற இளைஞர்களைச் சமுதாயப் பணிக்கு அழைப்பதாக உள்ளது. இளைஞர் ஆண்டை இமயத்திற்குக் கொண்டு சென்று விடுவீர் போலும்.
திருமானூர், ரத்னா அருண் பி. எஸ்ஸி.,

* சென்ற வார (14.4.85) ஆனந்த விகடன் இதழ் 28-ம் பக்கத்தில் அ. வசந்தாவால் எழுதப்பட்ட அதே துணுக்கு இந்த வாரம் கல்கி இதழில் 43-ம் பக்கத்தில் அதே நபரால் எழுதப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது.
முகப்பேர், கே. எஸ். எஸ். மணியன்.

* எடையைக் குறைப்பது எப்படி? என்பதை விளக்கமாக எடுத்துக் கூறி இருக்கிறார் டாக்டர் என். எஸ். வியாஸ்.

மனிதனுக்குக் 'கட்டுப்பாடு' எதிலும் அவசியம். இதை மறந்தால் பல வியாதிகள் நம்மைத் தேடி வரும்.
சென்னை—56. டாக்டர் நாவலர்தாசன்.

* பொதுவாக சத்துணவு சாப்பிட அங்கீகாரம் வழங்கப்பட்டு உள்ளதைவிட தினசரி மாணவர்கள் வருகை குறைவாகவே இருக்கும். ஆனால் பெரும்பாலும் எல்லா மாணவர்களும் வந்ததாகவே கணக்கு எழுதப்படும். அரிசி, பருப்பு, எண்ணெய், இந்தக் கணக்கெல்லாம் பார்த்தால், ஆண்டவனுக்கே வெளிச்சம். ஓர் ஆண்டுக்கு ஒட்டு மொத்தமாகக் கணக்கிட்டால் ஏராளமான பணம் வீண் விரயம் என்பது தெரியவரும்.

தற்போது துவக்கப் பள்ளிகளில் சனி, ஞாயிறு போன்ற விடுமுறை நாட்களில் சத்துணவு சாப்பிடும் மாணவர்கள் மிகவும் குறைவாக உள்ளனர். எட்டில் ஒரு பங்கு பேர்தான் பள்ளிக்கு வந்து சாப்பிடுகின்றனர். மற்றவர்கள் வீட்டிலேயே சாப்பிட்டுவிடுவார்கள். மிகக் குறைவாக வரும் மாணவர்களுக்காக பள்ளிக்கு வந்து உணவு சமைத்துப் போடுவதைவிட சனி, ஞாயிறு நாட்களுக்கு சத்துணவு போடுவதை நிறுத்தியே விடலாம். (உயர் நிலைப்பள்ளிகளில் தற்போது உள்ளது போலவே.) இதனால் சத்துணவு அமைப்பாளருக்கும், சமையல் உதவியாளர்களுக்கும் வாரத்தில் இரண்டு நாட்கள் விடுமுறையாவது கிடைக்கும். இதனால் அரசுக்கும் அரிசி, பருப்பு, எண்ணெய், பணம் மீதமாகும். சிறு துளி பெரு வெள்ளம்.

நட்டுவம்பாளையம், ஏ. சுப்பிரமணியம்.
தலைமை ஆசிரியர்,
பி.யூ.இ. பள்ளி.

(கடைசி கடிதம் பரிசு பெறுகிறது.)

## எதிர்காலம் உங்கள் கையில்

# விற்பனைக் கலையில் வல்லவராக

இந்த வாரம் முதலில் ஒரு 'முல்லா' கதை.

முல்லாவின் கழுதை கிழமாகி விட்டது. 'இதனால் இனிமேல் பயனில்லை; ஏதோ ஒரு விலைக்கு எப்படியாவது விற்றுத் தள்ளி விடுவது' என்று முடிவு கட்டினார். சந்தைக்கு ஓட்டிக்கொண்டு போனார்.

அங்கே ஒரு தரகரைப் பார்த்து, விஷயத்தை முடிக்கச் சொன்னார். தரகர், "நீர் கொஞ்சம் ஒதுங்கி நில்லும்! உம் எதிரிலேயே உம் கழுதையை விற்று, கமிஷனை எடுத்துக்கொண்டு மீதியைக் கொடுத்து விடுகிறேன்" என்றார். முல்லா ஒப்புக் கொண்டார்.

ஏலம் ஆரம்பித்தது. ஒன்றுக்கும் உதவாத கழுதையை தரகர் 'ஆகா, ஓகோ' என்று புகழ்ந்து சொல்ல, கூட்டத்தினர் விலை கேட்க ஆரம்பித்தனர். விலை ஏறிக் கொண்டே போனது. ஒரு நல்ல தொகை வந்ததும் அந்த விலையை மூன்று தடவை சொல்லி, ஏலம் கேட்டவரை பணம் செலுத்திக் கழுதையைக் கொண்டு போகும் படிச் சொன்னார். விலை கேட்ட ஆசாமி வந்தார். வந்தவர் வேறு யாருமில்லை; முல்லாவேதான்!

கதையை இங்கே நிறுத்திவிட்டு, ஒரு பாயிண்டைக் கவனிக்கலாம்.

இது எப்படி நிகழ்ந்தது?

உபயோகமில்லாத தன் கழுதையை முல்லாவே வாங்கும்படிச் செய்தது தரகரது விற்பனைத் திறமைதான்!

அது ஒரு தனி கலை.

குண்டூசி முதல் டிராக்டர் வரை, சோப்பு சீப்பு உட்பட, சகல விஷயங்களையும் தயார் பண்ணினால் மட்டும் போதுமா? ஜனங்களிடம் விற்க வேண்டாமா? ஜனங்களை வாங்க வைப்பதுதானே சேல்ஸ்மெனின் வேலை!

"இன்றைக்கு வேலை இல்லாதவர்கள் எண்ணிக்கை போலவே விற்பனைத்துறையில் வேலை வாய்ப்புகளும் அதிகம்தான். ஆனால் தகுதியான இளைஞர்கள்தான் கிடைப்பதில்லை" என்கிறார் பிரபல ஃபைபர் நிறுவனத்தின் பிராந்திய சேல்ஸ் மானேஜர் திரு. தாமஸ். "முதலில் 'வேறு எந்த வேலையும் கிடைக்கவில்லை; இதையாவது டிரை பண்ணலாமே' என்கிற மனப்பான்மைக்கு டாட்டா காட்ட வேண்டும். 'விற்பனைத் துறைதான் நமக்கு' எனத் தீர்மானம் பண்ணிக் கொள்ள வேண்டும்."



* திரு. எம். வி. தாமஸ்.

திரு. தாமஸ் மேலும் சொல்கிறார்: சேல்ஸ் லைனில் வருவதற்கு முதலில் தேவையான விஷயம் 'கம்யூனிகேஷன் எபிலிடி'. அதாவது அடுத்தவரிடம் எந்தவித மான தடையுமின்றி — தயக்கமின்றி — சரளமாய் தமது பொருளைப் பற்றி எடுத்துச் சொல்கிற திறமை. இன்றைய இளைஞர்கள் பலருக்கு இதில்தான் உதைக்கிறது.

சேல்ஸ் வேலைக்குத் தேர்ந்தெடுக்கிற நிறுவனங்கள் பெரும்பாலானவற்றில் 'குரூப் டிஸ்கஷன்' வைப்பார்கள். அதில் ஒவ்வொருவரும் எந்த அளவில் பங்கேற்கிறார்கள் என்று — அதாவது யார் அதிகம் பேசுகிறார்? அவர் அர்த்தமுடன் பேசுகிறாரா? உளறுகிறாரா? பேசாமலேயே இருப்பது யார்? போன்ற விஷயங்கள் — கூர்மையாய்க் கவனிக்கப்படுகின்றன.

சில நிறுவனங்களில் துண்டுச் சீட்டுகளில் பல்வேறு தலைப்புகளை எழுதிப் போட்டு ஒவ்வொருவரையும் இரண்டு சீட்டு எடுக்கச் சொல்லி அதில் ஒன்றைத் தேர்ந்தெடுத்து ஒரு நிமிஷம் அவகாசம் கொடுத்து இரண்டு நிமிஷத்துக்குப் பேசச் சொல்வார்கள். இந்த இரண்டிலுமே கம்யூனிகேஷன் திறமை தான் அளவிடப்படுகிறது.

அடுத்தது இண்டர்வியூ. அதில் குடும்பப் பின்னணி, பொது அறிவு இன்ன பிற தகுதிகள் அறியப்படுகின்றன.

ஒரு சிறு விஷயம் கவனித்தால் நல்லது.

எந்த நிறுவனத்திலிருந்து இண்டர்வியூ வந்தாலும் சரி, பொடி நடையாய்க் கடைத் தெருவுக்குப் போய், அந்தக் கம்பெனியின் தயாரிப்புகள் பற்றி விசாரித்து, ஒரு 'ஐடியா' பெறுங்கள். இது இண்டர்வியூவில் உதவும்.

சேல்ஸ், இண்டர்வியூ இவை சம்பந்தமாய் மார்க்கெட்டில் கிடைக்கிற புத்தகங்களைப் படிப்பதும் நல்லது.

பொதுவாக மற்ற பட்டப்படிப்புகளைவிட, சயன்ஸ் கிராஜுவேட்டுகளுக்கு இங்கே வாய்ப்பு அதிகம்.

—எஸ். சந்திரமௌலி.

"உன் காதல் கல்யாணம் ஏண்டா தள்ளிப் போயிண்டேயிருக்கு? உன் காதலியின் அப்பா சம்மதிக்கலேயா?"

"அவர் சம்மதிச்சுட்டாரு. என் மனைவி தான் சம்மதிக்க மாட்டேன்றா!"

—உதய்.



நமது பிரச்னை அறியாமை இல்லே, சோம்பல்தான்.

—டேல் கார்னகி.

— தராசு

# நீங்கள் கேட்டவை




• வள்ளல்.

• சி. சுப்பு, மயிலாடுதுறை.
? ரேடியோவில் வரும் விளம்பரங்களில் உங்களைக் கவர்ந்த விளம்பரம் எது?

! செய்தி அறிக்கைகள்.

• லீலா பாஸ்கரன், புதுவை.
? வில்லன் நடிகர் சத்தியராஜின் நடிப்பு எப்படி?

! 'பாபு' என்றதும் அடியான் 'எஸ் பாஸ் என்று உருட்டல் முழியுடன் பவ்யமாய்க் கட்டளையை எதிர்பார்த்து நிற்கக் கரகரத்த குரலில் ஆணை பிறப்பிக்கிற ஒரே டைப் வில்லன்களையே பார்த்துப் பழகி விட்ட நமக்குக் காஷுவலாகப் பேசுகிற வில்லன் சத்யராஜ் கொஞ்சம் வித்தியாச ராஜ்.

• எஸ். வில்சன், நாகர்கோவில்.
? அதோ வருகிறது இதோ வருகிறது என்று அறிவிப்புக்களைக் காட்டிக் கொண்டிருந்த பஞ்சாயத்துத் தேர்தல் வந்தேவிட்டதே!

! செப்டம்பரில்தானே .... அதற்குள் ரொம்ப சந்தோஷித்து விடாதீர்கள். நாலு மாதத்துக்கு மேல் இருக்கிறது. மற்றொன்று இந்த உள்ளாட்சி தேர்தல்களிலாவது அரசியல் ஆவேசங்கள் இன்றி ஊருக்கு உண்மையிலேயே நல்லது செய்வோர், செய்யக் கூடியவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டால் நல்லது. தலைவர்களுக்கு மனம் வருமா, இப்படி விட்டுக் கொடுத்துப் பெருந்தன்மையுடன் நடக்க?

• மு. சிவஞான முருகன், ஸ்ரீவைகுண்டம்.
? ஒதுக்கீடு முறையை சுதந்திரம் அடைந்ததிலிருந்து பின்பற்றுகிறோமே, வெளிநாட்டினர் இதைப் பற்றி என்ன நினைப்பார்கள்?

! அவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்பது முக்கியமல்ல. நாம் என்ன எண்ணுகிறோம் என்பதுதான் பிரதானம். நாம் இந்தப் பிரச்னையில் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து சுமுகமாகத் தீர்வு காணாமல் ஒருவரை ஒருவர் அடித்துக் கொண்டு உயிர் உடமைகளுக்குச் சேதம் விளைவிக்கும்போதுதான் அயல்நாட்டினர் கவரப்படுகிறார்கள். நம்மைக் காட்டுமிராண்டிகள் என்று எடை போடுகிறார்கள். அதிலும் மக்களைக் காக்க வேண்டிய போலீசே மக்களைத் தாக்கும்போது நாம் ஜனநாயகத்துக்கே லாயக்கற்றவர்கள் என்று எள்ளி நகையாடுகிறார்கள்.

• நல்லாலம் காசிதாசன், கீழ்கொவளவேடு.
? வரவு செலவு துண்டு இவைதான் மனித வாழ்வின் லட்சியமா?

# எழுத்தாளர் சங்கத்தில் ஒற்றுமை இல்லையே?

• வித்தியாசராஜ்.



! வரவுக்குள் செலவு செய்து துண்டு விழுவதைத் தவிர்ப்பது லட்சியமில்லையென்றால் தலையில் துண்டு போட்டுக் கொள்வதுதான் லட்சியம் என்றாகிவிடுமே!

*** க. தியாகராஜன், நெய்வேலி.**
**? ஜனநாயகத்தின் பலம் எது? பலவீனம் எது?**

! பலம்: சிந்தனை, செயல், எழுத்து, பேச்சு சுதந்திரங்கள். பலவீனம்: இந்தச் சுதந்திரங்களைப் பொறுப்பின்றி துஷ்பிரயோகம் செய்தல்.

*** என். உலகநாதன், லால்குடி.**
**? புத்தாண்டு தினத்தில் நீர் செய்த நல்ல காரியம் என்ன?**

! வள்ளுவர்கோட்டத்தில்தமிழகஅரசு நடத்திய திரைத்துறை பரிசளிப்பு விழாவுக்குப் போகாமலிருந்ததன் மூலம் அவமானப்படாமலும் அலுப்படையாமலும் தப்பியது. அப்புறம் டி. வி. யில் அன்றைய சிறப்பு நிகழ்ச்சிகளைப் பார்க்காமலிருந்தது

*** வி. ரவிகுமார், லால்குடி.**
**? சமீபத்தில் தங்கள் மனத்தை மிகவும் பாதித்த விஷயம்? (போபால் விஷவாயு விபத்தைத் தவிர)**

! பாதிப்பு என்பது ஆரோக்கியமான பாதிப்பாகவும் இருக்கலாமே! பூந்தமல்லிக்கு அருகே வேங்கடேசுவரா பொறியியல் கல்லூரி தொடங்கி வைக்க ஆளுனர் சென்றார். காஞ்சி காமகோடி மடத்தின் பீடாதிபதி ஆசி வழங்கினார். இதற்கு பத்து ஹெக்டேர் நிலத்தை திரு வி. என். வரதப்பன் வழங்கியுள்ளார் என்பதைப் பார்த்தபோது பிரமித்தேன். திரு வரதப்பன் முன்னாள் முதலமைச்சர் பக்தவத்சலம் அவர்களின் மாப்பிள்ளை. ஏராளமான சொத்து சுதந்திரங்களைப் பிதுரார்ஜிதமாய் பெறுவது அதிர்ஷ்டம். அதை நல்ல காரியங்களுக்கு வழங்குவது பெருந்தன்மை. சென்னைச் சுற்றுப்புறத்தில் பத்து ஹெக்டேர் என்பது சாமானிய மதிப்புள்ளது அல்ல. வள்ளல் வரதப்பனை வாழ்த்துகிறேன்!

*** கவி கண்ணன், போடிநாயக்கனூர்.**
**? எழுத்தாளர்கள் சங்கத்தில் ஒற்றுமை இல்லையே, ஏன்?**

! இருக்கிறதே! ஒற்றுமையாய் இருக்கக்கூடாது என்ற அளவில் ரொம்ப ஒற்றுமை காட்டுகிறார்களே!... இது என்ன நழுவல் பதில் என்று கேட்பவர்களுக்கு... சரி, பழங்கதைக்குப் போவோம்... அமரர் கல்கி அவர்களால் முதன் முதலில் தோற்றுவிக்கப்பட்டது தமிழ்எழுத்தாளர் சங்கம். ராஜாஜி, ஏ. ஜி. வேங்கடாச்சாரி, தேவன், என்றிப்படி பல ஜாம்பவான்கள் பொறுப்பில் இருந்தது சங்கம். அவர்கள் சொல்லுக்கு மற்றவர்களிடையே மதிப்பிருந்தது. அந்த மதிப்பைக் காப்பாற்றிக்கொள்ளவும் அவர்கள் முனைவார்கள். இப்போது அவர்களுக்கு ஈடான சொல்வாக்கு உடையவர்களும் இல்லை; இருந்தால் அவர்கள் சங்கத்தின் நிர்வாகப் பொறுப்பேற்க முன் வரவும் இல்லை. சரி, கல்கி காலத்தில் சலசலப்பு இல்லை என்கிறீர்களா? இருந்தது சுவாமி, இருந்தது. கல்கி உடனே சம்பந்தப்பட்டவரை அழைத்துப் பேசுவார். பத்து நிமிஷம் தான். வேற்றுமைகள் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடும். வெளியே ஒன்றும் தெரிய வராது. ஒன்றுமே நடக்காதது போல் சங்கம் தொடர்ந்து செயல்படும்...! இதற்கு மேல் சொன்னால் எனக்கும் இன்றைய சங்க நிர்வாகிகளுக்கும் இடையில் நிலவும் ஒற்றுமை போய்விடும்!

*** எஸ். ரவீந்திரன், திரு ராமேஸ்வரம்.**
**? கவிஞர்கள் திரை உலகில் நுழைவதால் கவிதை உலகம் பாழாகி வருகிறது என்பதை ஏற்றுக் கொள்வீர்களா?**

! திரை உலகம் தான் மேன்மேலும் குட்டிச்சுவராகி வருகிறதேயொழிய கவிதை உலகுக்கு ஒரு கேடும் இல்லை. அங்கே பணத் திருப்திக்கு எழுதுகிறார்கள். இங்கே மனத் திருப்திக்கு எழுதுகிறார்கள்.

*** பி. சுவாமிநாதன், கும்பகோணம்.***
**? அரசியலைசாக்கடைக்குஒப்பிடும்போது அரசியல்வாதியை எதற்கு ஒப்பிடலாம்?**

! சாக்கடை வாடையை வெறுத்து மூக்கைப் பொத்திக் கொண்டு அப்பால் போகிறவர்கள் அலிகள். சாக்கடையில் விழுந்து புரண்டு சுகிக்கிறவர்கள் பன்றிகள். சாக்கடையைச் சுத்தப்படுத்த அதில் துணிந்து இறங்குகிறவர்கள் தோட்டிகள் — நமது பெரு மதிப்புக்கு உரியவர்கள் இவர்களே.

*** ஆர்.சிவசுப்பிரமணியன், நாகப்பட்டினம்.**
**? நாரதர் வேலைக்குத்தான் வேறு பத்திரிகைகள் உள்ளனவே, கல்கிக்கு எதற்கு சிண்டு முடியும் வேலை? (இன்குலாப்—முத்து லிங்கம்.)**

! இது சிண்டு முடியும் வேலையில்லை; சிவிச் சிக்கெடுக்கிற காரியம்.

---

* ரூ. 10 பரிசு பெறுபவர்:
பி. சுவாமிநாதன்,
(மாடிப்பகுதி)
10, கீழ டபீர் தெரு,
கும்பகோணம்—612001.

---

ஆத்திரம் என்பது ஒரு அமிலம் போல. அந்த வாங்கிக் கொள்ளும் பாத்திரத்தைவிட அதைச் சேமித்து வைக்கும் பாத்திரத்துக்குத் தான் சேதம் அதிகம்.
—லிவென்டேல்.

**இசை மேதை ஜி. என். பி. பிறந்த 75ம் ஆண்டு இது. அவர் பிரதம சிஷ்யை பற்றியும் குருவைக் குறித்தும் சில விவரங்களைத் தருகிறது இந்தப் பேட்டிக் கட்டுரை.**

கர்நாடக இசையை 2400 அடி உயரத்துக்கு உயர்த்தியவர் என்ற பெருமையை எந்த இசைக் கலைஞருக்காவது கொடுக்கலாம் என்றால், அதற்கு எம். எல். வி. யைவிடப் பொருத்தமான ஒருவரைத் தேர்ந்தெடுக்க முடியாது! ஏனென்றால் சமுத்திர மட்டத்திற்குமேல் 2400 அடி உயரத்தில் இருக்கிறது ரிஷி பள்ளத்தாக்கு. அங்கேதான் எம். எல். வி. இப்போது பாட்டு சொல்லித் தருகிறார். மதனபள்ளிக்காரரான தத்துவஞானி ஜே. கிருஷ்ணமூர்த்தி நிறுவிய ரிஷிவேல்லி பள்ளியில் 'கணிதம், விஞ்ஞானம், மொழிகள் தவிர, சில அருங்கலைகளும் பாடமாகச் சொல்லித் தரப்படுகின்றன — கர்நாடக இசை, வீணை, மிருதங்கம், பரத நாட்டியம் என்று. அதற்குத் தகுந்த ரம்யமான சூழ்நிலையோடு, பசுமையான மரம் செடிகொடிகளும், வண்ணப் பூக்களுமாக இயற்கை எழில் கொஞ்சுகிறது இங்கே. சென்னையிலிருந்து சுமார் முந்நூறு கிலோமீட்டர் தூரத்திலிருக்கிறது ரிஷி பள்ளத்தாக்கு. ஆந்திரப் பிரதேசம் மதனபள்ளியிலிருந்து கிட்டத்தட்ட பதினைந்து கி. மீ. தூரம்.

### ஏன்?எப்படி?

எம்.எல்.வி.இங்கே வருவதற்கு முக்கியக் காரணம் முன்னாள் ஐ. நா. உதவிக் காரியதரிசி திரு.ஸி.வி.நரசிம்மன், அவரது ஒன்றுவிட்ட சகோதரி ஜெயலட்சுமி அம்மாள், பாலக்காடு மணி ஐயர், ஜி. என். பி. அவர்களின் நண்பரான ஸி. கே. வேங்கடநரசிம்மன் ஆகியோர்தான். "என் வாழ்க்கையில், அந்தச் சமயத்தில் எனக்கு மன நிம்மதி தேவையாயிருந்தது.என் மகளின் திருமணம் காரணமாக அப்போது ஏற்பட்ட மனவருத்தம்; என் கணவர், என் மகன் ஆகியோரின் உடல்நலக் குறைவு என்று பல சிரமங்களுக்கு இடையே நான் மன நிம்மதி இன்றி இருந்து வந்தேன். இப்போது எல்லாம் சரியாகி என் மகளும் சந்தோஷமாக வாழ்க்கை நடத்துகிறாள்.மகனும்திருமணமாகிமனைவி, குழந்தையுடன் சௌக்கியமாக இருந்து வருகிறான்... ஆனால் அன்று என் மனநிலை உற்சாகமின்றி இருந்தது. அந்தச் சமயத்தில் ரிஷிவேல்லி பள்ளிக்கு நான் வர முடியுமா என்று மேற்கூறியவர்கள் கேட்டார்கள். ஒரு மாறுதலான சூழ்நிலை ஆறுதல் தரும் என்று எண்ணி வந்தேன். ஆறுதல் கிடைத்தது மட்டுமல்ல. இந்த இடமும் ரொம்பப் பிடித்துப் போய் விட்டது. ஒட்டிக் கொண்டேன்!" என்கிறார் எம். எல். வி.

* பத்மபூஷண் விருது ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன் அளிக்கிறார்.



### கச்சேரி செய்வதும் கற்றுக் கொடுப்பதும்

"இத்தனை வருஷங்களாக மேடைக் கச்சேரிகள் செய்தே பழகிவிட்ட எனக்கு, இந்தப் பள்ளி வகுப்புகளில் பாட்டுக் கற்றுக் கொடுக்கும் பழக்கம் முற்றிலும் புதிசு. இது விநோதமில் நானே கற்றுக் கொள்ள வேண்டியது நிறைய இருக்கிறதே என்று தோன்றியது. வந்த புதிதில் உமா கல்யாணராமன் என்ற கணித ஆசிரியைதான் எனக்கு உதவினார். சங்கீதமும் தெரிந்தவர். அப்போதுதான் அவரும் சேர்ந்த புதிசு. ஸிலபஸ் எல்லாம் நான் வந்தபோது கிடையாது. பாலக்காடு மணி ஐயர் உதவியுடன் நானும் உமா கல்யாணராமனுமாக ஒருவாறு இந்த ஃபைன் ஆர்ட்ஸ் பகுதியை திட்டமிட்டோம். வடக்கஞ்சேரி கிருஷ்ணன் (பாலக்காடு மணியின் சிடர்) அன்றிலிருந்து மிருதங்கம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கிறார். வழுவூராரின் பிரதம சிடர் ராதாகிருஷ்ணன் பரத நாட்டியம் சொல்லித் தருகிறார். பாட்டு சொல்லித் தருவது சிரமம்தான். ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு சுருதி. அதை அனுசரித்துச் சொல்லித் தர வேண்டும். மற்ற இடங்களைப் போல, வேறு கச்சேரிகளைக் கேட்க இங்கு இவர்களுக்கு அதிக அளவில் வாய்ப்பே இல்லை.

"கல்கத்தா கிருஷ்ணமூர்த்தி சமீபத்தில் இங்கே வந்து சேர்ந்திருக்கிறார். அவர் தியரி வகுப்புகளை நடத்துகிறார் என்பதோடு, இசையும் போதிக்கிறார்.

"அம்மா — குழந்தை உறவுதான் இங்கே. ஆசிரியை — மாணவர் என்பதே கிடையாது. இங்கேயிருந்து செல்லும் என் பழைய மாணவ—மாணவிகள், நான் வெளியூர்களுக்குக் கச்சேரிகளுக்குச் செல்லும்பொழுது அங்கே என்னைப் பாசத்தோடு வந்து பார்ப்பதுண்டு. நெகிழ்ச்சியான சந்திப்புகள் அவை...

"பொதுவாகக் குழந்தைகள் அவர்களுக்குப் பிடித்த கீர்த்தனை என்றால் சீக்கிரம்

தைரியமுள்ளவனுக்கு அதிர்ஷ்டமும் துரதிர்ஷ்டமும் இரு கரங்களைப் போல; அவன் இரண்டையும் பயன் படுத்திக் கொள்கிறான்.

—செயின்ட் காதரீன்.

# பள்ளத்தாக்கில் ஒரு பள்ளிக்கூடம்

தெரிந்து கொண்டு விடுவார்கள். வாயைத் திறந்து பாடி, தொண்டையிலிருந்து சப்தம் ஒழுங்காக வரணும் என்கிறோம். காலை ஆறு முதல் ஆறரை வரை, வெறும் சுருதியில் நிற்க வேண்டும், ஒவ்வொரு சுவரமாக.

"நான்தான் 'இன்டர்னல் அஸெஸ்மெண்ட்' செய்கிறேன் இங்கே. பரீட்சைக்கு, வெளியிலிருந்து மேற்பார்வைக்கு வருகிறார்கள். தியரி பேப்பர் தில்லியிலிருந்து வருகிறது. விடைத்தாள்கள் திருத்தப்பட, வெளி இடங்களுக்குப் போய்விடுகின்றன.

"டைரக்டர் ஸ்ரீமதி ராதிகா, பிரின்ஸிபால் திரு. நாராயணன், தலைமை ஆசிரியை மிஸஸ் தாமஸ் — இவர்கள் எங்கள் ஃபைன் ஆர்ட்ஸ் பகுதியில் தனி அக்கறை காட்டி வருவதும், பல வசதிகள் செய்து தருவதும், எங்கள் உற்சாகத்துக்கு முக்கிய காரணம்."

## குரு ஜி. என். பி.

தமது குருவைப் பற்றிச் சொன்னார் எம்.எல்.வி:

* அரியக்குடியிடம் அதீத பக்தி. அவரைப் பூஜையே செய்வார்.

* பிறவி மேதையான ஜி. என். பி. அடக்கத்துடன் பேசுவார். 'என்னுடைய குற்றங் குறைகளை எடுத்துக் கொள்ளாதீர்கள். எல்லார் பாட்டையும் கேட்க வேண்டும். நல்ல அம்சங்களை கிரகித்துக் கொள்ள வேண்டும்' என்பார்.

* வானொலியில் கர்நாடக இசை தயாரிப்பாளராய் இருந்தபோது, மகாராஜபுரம் விசுவநாதய்யர் ஒருமுறை ரிகார்டிங்குக்கு வந்தார். உடனே எனக்கு போன் பண்ணி, 'நீ வந்து கேட்கணும். என்னமாய்ப் பாடுகிறார்!' என்று புறப்பட்டு வரச் சொன்னார்.



ஜி. என். பி.



'சங்கீத வாணி' பட்டம் வழங்கப்பட்ட போது மேடையில் டி. கிருஷ்ணராவ், கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை, கே. பி. சுந்தராம்பாள்.

* யார் நன்றாகப் பாடினாலும் பாராட்டுவார். தப்பு இருந்தாலும் சொல்லிவிடுவார். 'சரியாயில்லே என்றால் சரிப்படுத்திக் கொள்ளணும். தப்பாக நினைக்காதீர்கள்!' என்பார் சிநேகமாக.

* மனச்சாட்சிக்கு விரோதமாக எதுவும் செய்ய மாட்டார். அவர் வானொலியில் இருந்தவரை 'ஏ' கிரேட்தான் எனக்கு. 'ஏ—டாப்'புக்கு விண்ணப்பித்தும் அதை நிராகரித்துவிட்டார். "அதற்குள் 'ஏ—டாப்'புக்கு உனக்கென்ன அவசரம்? எனக்குத் தெரியும்!" என்றே சொல்லிவிட்டார். 1955—க்குப்பிறகுதான் எனக்கு 'ஏ—டாப்' கிடைத்தது.

* ரேடியோவில் பெர்ஷிய, இரானிய இசை கேட்டால் கூட, உன்னிப்பாக ரசித்துக் கேட்பார். மேற்கத்திய சங்கீதத்தின் நுட்பங்களை அறிந்து கொள்ளுவார்.

* காலமாவதற்கு இருபது நாட்களுக்கு முன்பு, நான் பண்ணச் சொல்லியிருந்த தம்புரா செய்து வந்தது. ருமாடிஸம் காரணமாக அவர் கையெல்லாம் வலி. அப்படியும் தம்புரா கருதியை மீட்டிப் பார்த்துவிட்டு, 'நன்றாயிருக்கிறது. யாருக்கும் கொடுத்து விடாதே. நீயே வைத்துக் கொள்!' என்றார். அதைச் செய்தவர் சோமு ஆசாரி என்ற கெட்டிக்காரர். அந்தத் தம்புராவை தெய்வத்திற்குச் சமமாக வைத்திருக்கிறேன்.

## புரந்தரதாசர் பாடல்கள்

"புரந்தர தாசர்' பாடல்களில் எனக்கு ஈடுபாடு ஏற்பட என் தாயார் தான் காரணம். டாக்டர் யு. ராமராவ் வீட்டில் என் தகப்பனார் பாட்டுச் சொல்லிக் கொடுத்துக் கொண்



டிருந்தார். தாசர் பரம்பரையில் வந்த நரசிம்ம தாசர் அடிக்கடி அங்கே வந்து தங்குவார். அவரிடம் அர்த்தங்கள் கேட்டு ரசித்தார் அப்பா. அவர் வழியாக தாசர் கிருதிகள் இருநூறைப் பாடம் பண்ணினார் அம்மா. அதனால்தான் அதில் ஓர் அதீத ஈடுபாடு. என் தாயார் 'புரந்தர விட்டலா!' என்று சொல்லிக் கொண்டேதான் உயிர் நீத்தார்."

## முதல் குரு

"என் முதல் குரு, என் தகப்பனார் அய்யாசாமி ஐயர்தான். தாயார் லலிதாங்கி அம்மாள். ஊர் தஞ்சை ஜில்லா மாயூரத்தையடுத்த கூத்தனூர். சரஸ்வதிக்கென்று தனியே கோயில் இருக்கிறது இங்கே.

"பெங்களூரில், பன்னிரண்டு வயதில் மேடையேறினேன். அன்று அம்மாவுடன் சேர்ந்து பாட வேண்டியிருந்தது. ஆனால் அன்றைக்கு அம்மா வர முடியவில்லே. நான் மட்டும் பாடினேன். பிருந்தா—முக்தா குடும்பத்தைச் சேர்ந்த அபிராமசுந்தரி அவர்கள்தான் வயலின்; ஹம்சதமயந்தி என்ற பெண்மணிதான் மிருதங்கம் வாசித்தார். இது தான் என் முதல் மேடைக் கச்சேரி.

"1941—இல் எனது பதிமூன்றாவது வயதில் முதல் ரிகார்டு கொலம்பியா நிறுவனம் வெளியிட்டது."

## சினிமாவில்

"நான் 1945—இல் சினிமாவில் நடிக்க விரும்பினேன். ஆச்சரியமாய் இருக்கிறதா? ராயல் டாக்கீஸ் 'சுதர்சன்'; 2000 அடிகூட எடுத்தார்கள். அப்புறம் நான் சில அபிப்ராய பேதங்களினால் அதிலிருந்து விலகிவிட்டேன்.

"1948—இல் தியாகராஜ பாகவதர் 'ராஜ முக்தி' தயாரித்தபோது, சி. ஆர். சுப்பராமன் இசை அமைத்தார். "சிவன் பாட்டுக்கள். இவன் பாடட்டுமே?" என்று ஆலத்தூர் (சகோதரர்) சுப்பையர் அப்பாவிடம் சிபாரிசு செய்தார். பூனா பிரபாத் ஸ்டூடியோவில் ரிகார்டிங் நடந்தது. அதுதான் சினிமா பின்னணி பாட ஆரம்பம். 1955 வரை பாடினேன். நமது முதலமைச்சரின் துணைவியார் ஸ்ரீமதி வி. என். ஜானகி அவர்களுக்குத் தான் என் குரலை முதலில் கொடுத்தேன்! ஆராரோ என்று ஒரு தாலாட்டுப் பாட்டு. அதே படத்தில் பானுமதி அவர்களுடன் ஒரு டூயட் பாடியிருக்கிறேன்!"

1967—இல் பாரத அரசின் 'பத்ம பூஷன்' விருது கிடைத்தது எம். எல். விக்கு. 1970—இல் மத்திய சங்கீத நாடக அகாடமி விருது. 76—இல் மைசூர் பல்கலைக் கழக டாக்டரேட் பட்டம். 77—இல் சென்னை மியூசிக் அகாடமியின் 'சங்கீத கலாநிதி' பட்டம். 78—ல் தமிழிசைச் சங்கத்தின் 'இசைப் பேரறிஞர்' விருது — இவை, இவருக்குக் கிடைத்த பல பட்டங்களிலும் விருதுகளிலும் முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவை. பதினைந்து ஆண்டுகளாக திருப்பதி தேவஸ்தான ஆஸ்தான வித்துவான். தமிழ்நாடு அரசுக் கலைஞராக மூன்று வருடங்கள்... சென்ற ஆண்டு, இந்திய அரசின் கலாசார அமைச்சகத்தின் எமரிடஸ் ஃபெலோஷிப்.

பேட்டி—கட்டுரை: சாருகேசி
வண்ணப்படம்: யோகா

(சென்ற இதழிலும் இந்த இதழிலும் இடம் பெற்றுள்ள பொன்மொழிகள் முகப்பா குருப்பின் 'தீர் மாக்ஸாம்ஸ எ ஃட' என்ற வெளியீட்டிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டவை)


Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani Editor: K. Rajendran

REGISTERED No. M 4392
Registered as a Newspaper in Sri Lanka

HAPPY BIRTHDAY

# இன்பமான பிறந்த நாள். இன்பமான ஆண்டுவிழா.
# இன்பம். இனிமை. இன்ப மயம்!

ரஸ்னு விழாக்களை நினைவுகொள்ளும் இன்ப நிகழ்ச்சியாக மாற்றிவிடுகிறது.

ஒரு பேக் ரஸ்னுவை திறந்து வையுங்கள். மகிழ்ச்சி சேரம் துள்ளிக் குதித்திடும். உங்கள் விருந்தினர்களை அன்புடன் ஒரு க்ளாஸ் ரஸ்னு வோடு வரவேற்றிடுங்கள். அதைத் தயாரிப்பது சுலபம். சில நிமிடங்கள் போதும். பலவகை பயனுள்ளதுகூட. அதை சாதாரணமாகவோ அல்லது ஐஸ் மற்றும் சோடாவில் கலந்து பரிமாறுங்கள். இரண்டு முறையிலும் அதன் சுவையே அலாதி! இதுமட்டுமா, நாவில நீர் ஊறும் 9 நறுமணங்கள் உண்டு.

ஒவ்வொருவருக்கும் ஒவ்வொன்று. **ஆரஞ்ச், அனுனஸி, எலுமிச்சை, காலாகட்டா, மிக்ஃப்ரூட், ரோஜா, கசகசா, மசாலா மில்க், மசாலா சோடா.** ரஸ்னு சிக்கனமானதும்கூட. இதர எந்த ஸ்குவாஷ்/ஸிரப்பைவிட ரஸ்னு வுக்கு பாதிக்கும் குறைந்த செலவுதான்.






## ரஸ்னு

ஸாஃப்ட் ட்ரிங்க் கான்ஸென்ட்ரேட்

**சுவைமிக்கது சிக்கனமானது பல நறுமணங்கள் கொண்டது.**

குவைத், தோஹா, பாஹ்ரின், மொரீஷியஸ், செய்ரோ, கார்டூம், லுஸாகா, செய்ஷேல், ஜெட்டா, ஓஸ்லோ, லண்டனில்கூட கிடைக்கிறது.

தயாரிப்பவர்கள்: பயோமா இண்டஸ்ட்ரீஸ், அஸர்வா, அஹமதாபாத்-380 016

Mudra:A:Pl:2121 TAJ